# பாஞ்சாலி சபதம்

க. தேவகி பிரகாசம்

வெளியீடு :
K. தேவகி பிரகாசம்
17, அவிலாலா தெரு,
திருப்பதி, சித்தூர் மாவட்டம்
ஆந்திரப் பிரதேசம்

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | PANCHALI SABATHAM |
| Author | : | K. Devaki Prakasam |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Copy right | : | Author |
| Paper used | : | 11.2kg white cream wove |
| Size of the Book | : | 18×12.5 cm |
| Type used | : | 10 pt. |
| Number of pages | : | 140 |
| Number of copies | : | 1000 |
| Printers Name | : | MOOVENDHAR ACHAGAM<br>Royapettah, Madras-14 |
| Binding | : | Card Board |
| Price | : | Rs. 20 |
| Publisher | : | K. DEVAKI PRAKASAM<br>17, Avilala Street<br>Thirupathi, Chittor Dist.<br>Andhra Pradesh |
| Subject | : | Religious Philosphy |



THIS BOOK

Is printed and
published with
the financial
assistance of
Tirumala-Tirupati
Devasthanams
under their scheme
"Aid to publish
religious books".

DEDICATED
to
My Son
CHANUKYA SAI

OM BHUR, BHUVAH, SUVAH
TAT SAVITUR VARENYAM
BHARGO DEVASYADHIMAHI
DHIYO YONAH PRACHODA YAT

Om, who is the dearer than our breaths
Is self subsistent, all knowledge and
all bliss:
We medidate upon that adorable effulgence
Of the resplendent vivifier of the universe,
Savita
May he illumine our intellects unto thee
right-path.

# என்னுரை

வாழ்க்கைக்கு வேண்டிய அறிவுரைகளின் கருவூலமாக விளங்குவது மகா பாரதம். கெடுமனங் கொண்ட சிலர், பெரும் பொறுப்பில் இருந்த காரணத்தால் ஏற்பட்ட பேரழிவையும் அது காட்டுகின்றது.

'பாஞ்சாலி சபதம்' அதன் சிறந்த பகுதி. கொண்டவர்களும், பெரியோர்களும் உதவாமல் மௌனமாயிருந்த நிலையில், அவமானத்துக்கு உள்ளான ஒரு பெண்ணின் உள்ளக் குமுறல் அது.

இதனை வில்லியாரும் பாடியுள்ளார்; பாரதியாரும் பாடியுள்ளார். காலத்தாலும் எண்ணத்தாலும் வேறுபட்ட இந்த மகா கவிஞர்கள், எவ்வாறு பாஞ்சாலி சபதத்தைப் படைத்துள்ளார்கள் என்று ஒப்பீடு செய்யும் சிறந்த முயற்சியால் உருவாக்கப்பட்டது இந்நூல். இந்நூல் திருப்பதி தேவஸ்தானத்தார் அவர்களின் உதவியால் வெளி வருகின்றது. அவர்களுக்கு நன்றிக் கடன் பட்டுள்ளேன்.

இந்நூலை நல்ல முறையில் பொறுப்பேற்று அச்சிட்ட மூவேந்தர் அச்சகத்தாருக்கும் எனது குடும்பத்தாருக்கும் என் நன்றி உரியதாகுக!

—க. தேவகி பிரகாசம்

# பாராட்டுரை

**புலவர் ஆர்.எச். இராசகுமாரி** எம்.ஏ. பி.எட்.
மூத்த தமிழாசிரியை,
இரயில்வே காலனி
உயர்நிலைப்பள்ளி
அயன்புரம், சென்னை-600023.

பழம்பெருமை மிக்க இதிகாச நூல்களுள் ஒன்றான மகாபாரதத்தைத் தமிழில் வில்லி பாரதமாகத் தந்தவர் வில்லியார். பாரதத்துள்அடங்கிய வீரமங்கைபாஞ்சாலியின் கதையை பாரதப் போருக்கு அடித்தளமிட்ட சபத நிகழ்ச்சியை 'பாஞ்சாலி சபதம்' என்னும் பெயரில் சிறு காப்பியமாகப் படைத்தவர் பாரதியார். வில்லி-பாரதி என்னும் இருவேறு காலத்திய இலக்கியப் படைப்பாளிகளின் படைப்புகளை ஒப்பிட்டுப் பார்க்க விழைந்து துணிந்து மேற்கொண்ட முயற்சியின் விளைவே திருமதி K. தேவகி பிரகாசம் ஆக்கியுள்ள இந்நூல்.

ஆசிரியை, 'பாஞ்சாலி சபதம்' எனும் பாரதியின் படைப்பின் நோக்கம் என்னவாக இருக்கும் என ஊகிப்ப தோடு, வில்லியாருடன் பாரதி உடன்படும் மாறுபடும் கருத்துகளைக் காணும் சிறு முயற்சியையே தாம் மேற்கொண்டிருப்பதாகக் குறிப்பிடுகிறார்.

பெண் விடுதலை வேண்டி பெண் உரிமைக்குக் குரல் எழுப்புவதில் முன்னணியில் நின்ற பாரதி தம் கருத்து களுக்கென வாதிடும் ஏடாகப் பாஞ்சாலி சபதத்தை உருவாக்கி இருக்கலாம்.

'கடவுள் கருணை நம்பியவர்களைக் கைவிடாது' என்னும் அழியாப் பேருண்மையைப் பாஞ்சாலியின் வரலாறு பறைசாற்றுவதனை உலகிற்கு நினைவூட்ட இதனைத் தீட்டி யிருக்கலாம் என்பன போன்றவை பாரதியின் படைப்பின் நோக்கம் பற்றிய இவரது ஊகங்கள்.

இந்நூலில் ஆசிரியை ஆங்காங்கே உவமைகளையும், பழமொழிகளையும் கையாண்டுள்ளார். 'இலக்கியம் என்பது வாழ்க்கையின் பிரதிபலிப்பே' எனும் கருத்தை வலியுறுத்த ஆங்கிலப் புலவர்களின் கருத்துகளை மேற்கோள்களாகப் பயன்படுத்தியுள்ளார். இனிய எளிய உரைநடையில் கருத்துகளைச் சொல்லும் பாங்கு சிறப்பாக உள்ளது.

காப்பிய நிகழ்ச்சிகள் நடைபெறும் இடமான அத்தினா புரத்து மக்கள் சமுதாயம், பாரதி தன் கண் முன் நேரிற் காணும் பாரத சமுதாயம் இரண்டும் காலத்தால் வேறு பட்டவை. எனினும் கொள்கை, முரண்பாடு, போலித்தனம், மோசடி ஆகியவை அன்றும், இன்றும் ஒன்று போலவே இருப்பதை பாரதி தம் படைப்பில் படம்பிடித்துக் காட்டு வதாகக் குறிப்பிடும் ஆசிரியை, பாரதி இக்காவியத்துள் வரும் கதை மாந்தரின் இயல்புகளைப் பேசுங்கால் வில்லியோடு உடன்படும் இடங்களையும், மாறுபடும் இடங் களையும் தெளிவாக ஒப்பிட்டுக் காட்டியுள்ளார். இறுதியில் பாஞ்சாலி செய்த சபதமாகப் பாரதி பாடிய பாடலுக்கு ஆசிரியை தந்துள்ள விளக்கம் சிறப்பாக உள்ளது. வில்லி— பாரதி எனும் இருபெருங் கவிஞர்களையும் ஆசிரியை இந்நூலில் பேசியிருந்தாலும் பாரதியே இவரைப் பெரிதும், கவர்ந்தவர் என்பதை இந்நூல் தெளிவாக்குகிறது.

இந்நூலாசிரியை திருமதி தேவகிபிரகாசம் என்னுடைய மாணவி என்று கூறிக் கொள்வதில் பெருமகிழ்வும், பெருமிதமும் கொள்கிறேன். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பதற்கிணங்கப் பள்ளிப் பருவத்திலேயே படிப்பில், பேச்சில், எழுத்தில் ஆர்வமிக்க மாணவியாகத் திகழ்ந்தவர். தமிழ் மொழியில் தனி ஈடுபாடு கொண்ட இவர் ஆங்கிலத்திலும், ஆற்றல் வெளிப்படுத்தியவரே. ''முயன்றால் முடியாததில்லை' என்னும் வாய்மொழிக்கு எடுத்துக்காட்டாக விளங்குபவர். சோர்ந்து போகாத சொந்த முயற்சியால் பற்பல பட்டங்களைப் பாங்குறப் பெற்று, சிறந்த கல்வியாளராய்த் திகழும் இவர் எழுத்துத் துறையிலும் ஈடுபாடு கொண்டு தனது 'கன்னி' முயற்சியாக இந்த இனிய நூலைப் படைத்திருப்பது தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குச் செய்யும் சேவையாகும்.

அமைதி, அன்பு, ஆற்றலொடு பணிவாம் பண்பும் கொண்டு விளங்கும் திருமதி தேவகி, தமது ஆசிரியர்களை என்றும் மறவாதவர்; மதிக்கத் தவறாதவர். இவரது இத்தகு பண்பாடே இவரது உயர்வுக்கு ஒரு காரணம் என்பது உண்மை. 'நுண்மாண் நுழைபுலம்' கொண்ட இவர் தமது இலட்சியப்பயணத்தில் பற்பல வெற்றிகளைக்குவித்து, வீடும் நாடும் போற்ற, 'குன்றிலிட்ட விளக்கெ'னத் திகழ்ந்து நீடு வாழ இறையருள் புரியட்டும் என வாழ்த்தி உளமார்ந்த பாராட்டுகளை உரித்தாக்குகிறேன்.

சென்னை-23
27-11-92

ஆர். எச். இராசகுமாரி

# பாஞ்சாலி சபதம் (வில்லி-பாரதி)

தமிழ் இலக்கிய வளர்ச்சியில், இருபதாம் நூற்றாண்டு குறிப்பிடத்தக்கவோர் இடத்தைப் பெற்றிருக்கிறது. ''புதுமைப் படைப்பு'' என்ற தோற்றத்தில், முன்பிருந்த தேவையற்ற கட்டுத்தளைகளை வெட்டியெறிந்து, காலத்துக்கேற்ற புதுக் குரலில், தமிழ் இலக்கியம் இசைக்கத் தொடங்கியது. கருத்திலும் வடிவத்திலும் காணப்பட்ட இம்மாற்றத்தை ''மறுமலர்ச்சி'' என்ற தொடரால், இலக்கிய விமர்சகர்கள் குறிப்பிட்டனர். இந்த 'வளர்ச்சி' யினைக் கண்டு அகம் களிப்பவர்களுமுண்டு, முகம் சுளிப்பவர் களுமுண்டு. அதற்குக் கராணம், இலக்கியம் பற்றி அவரவர்கள் கொண்ட கருத்துக்களே.

மொழியென்பது கருத்துப் பரிமாற்றதுக்கெனக் கண்டு பிடிக்கப்பெற்ற கருவியே யென்பதனைப் புரிந்து கொண்டால் காலத் தேவைக்கேற்ப அது எவ்வாறு உருக் கொள்ள வேண்டும் என்பதில் கருத்து வேற்றுமைகள், பெரிய அளவிருக்க முடியாது. வளர்ந்து வரும் மனித சமுதாயத்தின் பல்துறையறிவியல்களின் புதுப்புதுக் கருத் தோட்டங்களுக்கு ஈடு கொடுத்து இடம் அளிக்கும் திறமுள்ள மொழிகளே, வளமும் வாழ்ச்சியுமுறும் என்பதும், வளைந்தும் நெளிந்தும் கொடாமல் விரைத்து நிற்கும் மொழிகள், நாளடைவில் குன்றித் தேய்ந்திடுமென்பதும், மொழிகளின் வரலாறு காட்டும் உண்மைகள்,

இன்று அமெரிக்கர்கள், அண்டை வீட்டுக்காரர்களாகி விட்டார்கள். ஆங்கிலேயர்கள் எதிர் வீட்டில் குடியேறியிருக்கிறார்கள். ருஷ்யர்கள் நம் வீட்டிலேயே உடனுறைகிறார்கள். இவர்களுடன் பழகாதிருக்க முடியுமா? பேசாதிருக்க வியலுமா? பேசினால், பழகினால், நம் சொந்த 'வைதிகம்' கெட்டுவிடுமென்றால் வைதிகத்துக்காக வாழ்க்கையா? வாழ்க்கைக்காக வைதிகமா? என்ற வினாக்களுக்கு முதலில் தெளிவான விடைகளைக் காணவேண்டும்.

மொழித் தத்துவத்தை யுணர்ந்தவர்கள் மொழியில் வைதிகத்தை, அளவு கடந்து பாராட்ட மாட்டார்கள். ஏனையோர்களைப் போல், மொழிப் பாதுகாப்பில் அவர்களுக்கும் கருத்துண்டு. மொழியின் அஸ்திவாரம் கெட அனுமதிக்க மாட்டார்கள். செடி, வானத்தை நோக்கி எவ்வளவு உயர்ந்தாலும், அதன் வேர் மண்ணில் பதிந்திருப்பதை அவர்கள் மறக்கமாட்டார்கள். மொழியில் புகுத்தப்படும் புதுமைகளெல்லாம் அம்மொழிக்குரிய பழைய மரபில் கால் கொண்டு நிற்கின்றனவாவெனக் கண் காணித்துக் கொள்வார்கள்.

இந்த அடிப்படை உண்மையினை மறவாமல் 'பழைய கள்ளினைப் புது மொந்தையில் வார்ப்பது' என்பார்களே, அது போல, இந்த இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலே, பாரதி தமிழ், மொழியின் வாழ்க்கையிலே, ஒரு புதுச் சகாப்தத்தைத் தோற்றுவித்தான். தமிழ் இலக்கிய உலகில் பாரதி கால் வைத்ததின் காரணமாகத் தமிழ் வளர்ச்சியில் புதுமைகள் அரும்பியதால், அவனைத் தமிழ் மறுமலர்ச்சியின் 'விடிவெள்ளி' எனப் பாராட்டுகிறார்கள்.

பாரதியின் இலக்கிய வாழ்வு தொடங்கிய இருபதாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில், இரண்டு தலைமுறைகளின் சந்திப்பினை இலக்கிய விமர்சகர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். ஒன்று பழைய தலைமுறை; மற்றொன்று புதிய தலைமுறை.

இந்து சமுதாயத்தின் அடிப்படைக் கொள்கைகளை, அறம், பொருள், இன்பம், வீடு என்பர், அறிந்தோர். இந்த நான்கும் இணைந்த முழுமையே இந்துக்களின் தத்துவ தரிசனம். இந்த நான்கு தத்துவங்கட்கு உட்பட்டேதான் பழைய தமிழ்க் கவிதையுலகு இயங்கி வந்திருக்கின்றது. இவற்றினுக்கு முரணான கருத்துக்களைத் தமிழ் இலக்கியங்களில் காணமுடியாது. இந்நான்கினையும் பொருளாக வைத்தே தமிழ்ப் பாவலர்கள், யமகம், திரிபு, அந்தாதி, மடக்கு, மாலை மாற்று, சுழிகுளம், ரதபந்தம், நாக பந்தம், கமலபந்தம், நீரோட்டகம் போன்ற எளிதில் பொருள் விளங்காத செய்யுட்களை எழுதிக் குவித்துத் தமிழ் கடினமான மொழியென்று கருதுமாறு செய்துவிட்டனர். தமிழ்த்தாயினுக்குப் பூசை புரியும் தனியுரிமை தங்களுக்கே உண்டென்றும் அவர்கள் மார் தட்டிக் கொண்டனர். இந்தப் பூசாரிகளின் செயலால், தமிழ்த்தாய் தன் மேனி மெலிந்து நலிந்து வளங்குன்றிப் போனாள்.

இந்த அவலநிலையிற்றான் புதுத்தலைமுறையின் முதல் பிரதிநிதியாய்த் தமிழன்னைக்கு வாழ்வளிப்பவனாய்ப் பாரதி தோன்றினான்.

''எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக் கூடிய சந்தம், பொதுமக்கள் விரும்பும் மெட்டு இவற்றினையுடைய காவியமொன்று செய்து தருவோன் நமது தமிழ்மொழிக்குப் புதிய உயிர் தருவோனாவான். ஓரிரண்டு வருஷம் நூற்பழக்கமுள்ள தமிழ் மக்கள் எல்லோருக்கும் நன்கு பொருள் விளங்கும்படி எழுதுவதுடன் காவியத்துக்குள்ள நயங்கள் குறைவுபடாமலும் அமைக்க வேண்டும்'' என்று தமிழ் மொழியின் புத்தெழுச்சிக்கு வழி காட்டியதுடன், தான் வகுத்துக் கொடுத்த புது மரபினுக்கு எடுத்துக்காட்டாகப் ''பாஞ்சாலி சபதம்'' என்றவொரு சிறு காப்பியத்தையும் அவன் செய்து காட்டினான். தான் கையாளும் கவிதை நடையினைப் பற்றி ''சுவை புதிது'' பொருள் புதிது, சொல் புதிது, சோதி மிக்க நவ கவிதை

எந்நாளும் அழியாத மாகவி த'' என்று அறிமுகமும் செய்து வைத்தான்.

பாரதி துணிந்து மேற்கொண்ட இப்புது முயற்சியின் விளைவாகத் தமிழ்த் தாயின் கோயில், ஓரளவு தமிழ் கற்றவர்கட்கும் திறந்து விடப்பட்டது. தமிழ்மொழி ''கடின மானது'' என்ற அவச்சொல்லும் சிறிது சிறிதாக மறைந்து ''நாமும் தமிழைக் கற்கலாம் போலிருக்கின்றதே'' என்ற ஆர்வத்தையும், துணிவினையும் பலருக்குண்டாக்கியது.

தமிழ்ச் சொற்களைக் கையாளும் திறத்தாலும் கருத்துக் களை வெளியிடும் பான்மையிலும், பாரதி, புதுப் பாதை யினை அமைத்துக் கொடுத்தாலும், தமிழ்க் காப்பியங் கட்குரிய அடிப்படைக் கோட்பாடுகளை அவன் புறக் கணிக்கவில்லை. அறம், பொருள், இன்பம், வீடு என்ற இந்து சமுதாயத்துக்குரிய உறுதிப் பொருள்களின் அடி நாதம், பாரதி பாடல்களில் இசைப்பதனைப் பாரதி பாடல்களை மேலெழுந்த வாரியாகப் படிப்போரும் காண்பர். பாரதி பாடல்களில் காணப்படும் இவ்வியல்பே பழமை விரும்பிகளையும், புதுமை வேட்போரையும் பாரதி யின் நண்பர்களாக்கியது.

பாரதி, ஒரு பிறவிக் கவிஞன் (Born Poet). பிள்ளைப் பிராயத்திலிருந்தே அவன் கவி பாடத் தொடங்கிவிட்ட செய்தி அவன் வரலாற்றினை யறிந்தவர்கட்குப் பழைய செய்தி. சிறுவன் பாரதியின் கவி உள்ளம் சீண்டி விடப்பட்ட போதெல்லாம் தூண்டி விடப்பட்ட போதெல்லாம் அச்சீண்டலும் தூண்டலும் கவிதைகளாக விடைகள் வடிவத்தில் வெளிப்பட்டதற்குத் தக்க சான்றுகளாக கிடைத்துள்ள அவன் தனிப்பாடல்கள் சான்று பகரும்.

பாரதியின் கவிதையூற்று வெளிப்பட்டு, வெள்ளமாய்த் தொடர்ந்து பாயத் தொடங்கியபோது, அவன் உள்ளத்தில் இருந்து முதலில் ''தேசிய கீதங்கள்'' என்னும், ஒரு பொருள்

நுதலிய பல இசைப் பாடல்களே எழுந்து, விடுதலைத் தாகம் கொண்டவர்களின் வேட்கையினைத் தணித்தது. அந்தத் தாகம் அவனுக்கும், யாவரினும் மிக்கிருந்ததால், அப்பாடல்களில் ஓர் உத்வேகமும், புரட்சிக் கருத்துக்களும் ஜுவாலை விட்டன. அந்தக் காலத்தில், பாரத நாடெங்கும் கொழுந்து விட்டெரிந்த விடுதலை வேட்கையின் சூழ்நிலையில், பாரதியிடம் முதலிற் பிறந்த தேசிய கீதங்கள், அவனைச் சிறந்ததொரு தேசியக் கவிஞனாகத் தமிழ் நாட்டிற்கு அறிமுகப்படுத்தின. தூங்கிக் கிடந்த தமிழ் மக்களின் உணர்ச்சிகளைத் தட்டியெழுப்பும் போர்ப்பறைகளாகவும், அன்னிய ஆதிக்கத்தின் கொடுமைகளை அம்பலப் படுத்தும் விளம்பரங்களாகவும், உள்நாட்டுக் கோழைகளைப் பரிகசிக்கும் குத்தூசிகளாகவும், அதே சமயத்தில் தமிழ் மொழியின் இனிமையையும், எளிமையையும், ஆழத்தையும் விளக்கும் எடுத்துக் காட்டுகளாகவும், அத்தேசிய கீதங்கள் திகழ்ந்த காரணங்களால், அவை, பாரதியின் கவிகளில் முதலிடம் பெற்றன. அன்றியும், அக்காலத்திலிருந்த நாட்டின் அரசியல், அப்பாடல்களுக்குத் தனிப்பட்டதொரு நிலையினையும் ஏற்றத்தையும் அளித்தன. இது வரலாற்று உண்மை.

எனினும், அத்தேசிய கீதங்கள் பாரதியை, உலக மகாகவி யாக்கியிருக்க முடியாது. ஏனெனில், நாம் இப்போது, பாரதி வேண்டிப் பாடிய சுதந்திரத்தைப் பெற்று விட்டோம். நாடு அடிமைப்பட்டிருந்த அந்தக் காலத்தில், அப்பாடல்கள் ஊட்டிய உணர்ச்சியுடன் ஒப்பிட்டால், சுதந்திரம் பெற்றுப் பல ஆண்டுகள் கடந்த பின்னர், இப்போது அப்பாடல்களை அதே உணர்ச்சியுடனும் சுவையுடனும் நம்மால் அனுபவிக்க முடியவில்லையென்பது புலப்படும். காரணம், பாரதியின் "தேசிய கீதங்கள்" காலதத்துவம் கடந்த பாடல்களல்ல. ஒரு குறிப்பிட்ட காலத்துக்கெனப் பிறந்து, குறித்த பயனை நல்கிவிட்டு, அந்தக் காலம் முடிந்த பின்னர், ஏட்டளவில் நின்று, காலக் கண்ணாடியாய்ப் பாரதியின் தேசப் பற்றினையும், அவன் கையாண்ட

ஆற்றல் மிக்க தமிழின் இனிமையையும் எளிமையையும் நினைவூட்டும் எழுத்துச் சின்னங்களாயிருக்கின்றன.

ஆனால், பாரதியை உலக மகாகவிஞர்களுள் ஒருவனாக்குபவை அவன் படைத்த இறவாத புகழுடைய கண்ணன் பாட்டு, குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம் ஆகிய இலக்கியங்களேயாம்.

இவற்றுள், ''பாஞ்சாலி சபதம்'' என்ற நூலினை மட்டும் எடுத்துக் கொண்டு; அதன் இலக்கியத் தரத்தினை ஆராயும் பெரும் பணியினை ஆய்வாளர்களுக்கு ஒதுக்கி விட்டு, பாரதி அதனைப் படைத்தற்கு ஊகித்தறியக் கூடிய காரணங்களையும், அதற்கும், வில்லி பாரதத்தினுக்கும் கதைப் போக்கிலும் பாத்திரப் படைப்பிலும் காணப்படும் சில ஒற்றுமை வேற்றுமைகளையும் ஓரளவு காணும் முயற்சியே, ஈண்டு மேற்கொள்ளப்படுகிறது.

''பாஞ்சாலி சபதம்'' என்ற தொடரைக் கேட்டவுடன், பாரதக் கதையும், ''வெந்திறல் கொண்ட துருபதன் செல்வ'' மகளும், பாண்டவர்களின் மனைவியுமான திரௌபதியும், நம் நினைவில் எழுவர்.

நம் நாட்டில் தோன்றிய இரு பெரும் இதிகாசங்களுள் பாரதம் ஒன்று; மற்றோர் இதிகாசமாகிற இராமாயணத்தை விடப் பாரதமே, தமிழ் மக்களின் உள்ளத்தை கவர்ந்துள்ளதென்பது, யாவரும் அறிந்த உண்மை. வழிவழியாக வந்த கதை, பல்லாயிரக் கணக்கான முறைகள் கேட்டுக் கேட்டு, உள்ளத்தில் வடிவம் பெற்றுவிட்ட கதை என்பதால், பாரதம், மக்களைக் கவர்ந்துள்ளது என்பது மட்டுமல்ல; பாரதத்தில் வரும் கதாபாத்திரங்கள், இராமாயணத்தில் வரும் கதாபாத்திரங் களைவிட, அன்றும் இன்றும் வாழ்ந்த வாழ்கிற மனிதர் களுடனும், அவர்களின் சராசரித் தத்துவங்களுடனும் வாழ்க்கையுடனும் நெருக்கம் கொண்டிருந்ததும், கொண் டிருப்பதும் காரணமாகும்.

இக் காரணத்தினடிப்படையில், பாரதக் கதையிலிருந்து ஒரு துணுக்கினை யெடுத்துக் கொண்டு, தன் கற்பனையாலும், எழுத்துத் திறத்தாலும் சிற்சில மாற்றங்களைச் செய்து, புதுக்குரலில் பேச வேண்டுமென்ற அவாவினால், பாரதி, ''பாஞ்சாலி சபதத்தினை'' எழுதியிருக்கலாம்.

பெண்ணின் பெருமையினைப் பாதுகாப்பதிலும் அவர்களுக்குச் சமூக விடுதலையினைப் பெற்றுத் தருவதிலும், ஆண்களோடு அவர்களும் சரிநிகர் சமானமாக நடத்தப்பட வேண்டுமென்று உரிமைக்குரல் எழுப்புவதிலும், பாரதி முன்னணியில் நின்றவன். இக்கருத்துக்களுக்கென வாதிடும் ஏடாகப் ''பாஞ்சாலி சபதத்தினை'' உருவாக்கியிருக்கலாம்.

''பேயாட்சி செய்தால் பிணம் தின்னும் சாத்திரங்கள்'' என்றபடி, நாட்டு மன்னன் கொடுங்கோலனாகித் தருமத்தைக் குழி தோண்டிப் புதைத்துவிட்ட நிலையில், தொட்டுத் தாலி கட்டிய கணவன்மார்கள், தம் கடமையினையும் மானத்தினையும் பறக்க விட்டுத் தம் மனைவியின் தன்மானத்தைக் காக்க மாட்டாது பேடிகளாய்த் தாழ்ந்து விட்ட நிலையில், நீதியினையுணர்ந்த சான்றோர்களும் அநீதியினைத் தட்டிக் கேட்க மாட்டாத கோழைகளாய்த் தலை கவிழ்ந்து கிடந்த நிலையில், நாட்டு மக்களும் மன்னனுக்கஞ்சிப் பாமரராய் ஊமைகளாய் விலங்குகளாய்ப் பான்மை கெட்டு வாயடைத்துப் போன நிலையில், உலகம் முழுதும் கைவிட்டாலும், ''கடவுள் கருணை நம்பியவர்களைக் கைவிடாது'' என்ற அழியாத பேருண்மையினைத் திரௌபதியின் வரலாறு பறைசாற்றுவதனை உலகுக்கு நினைவுறுத்தப் பாரதி, ''பாஞ்சாலி சபதத்தினை''த் தீட்டியிருக்கலாம்.

படைக்கப்படும் ஒரு காவியமானது, பழமையின் பெருமையினை நினைவுபடுத்துவதுடன் நின்றுவிடாது, அது தோன்றிய காலத்தின் தேவைகளையும் ஓரளவு நிறைவேற்றுவதாகவும் இருக்க வேண்டுமென்ற இலக்கியக்

கோட்பாட்டினைத் தான் ஏற்றுக் கொண்டுள்ளதற்குச் சான்றாகவும், ''பாஞ்சாலி சபதத்தினை''ப் பாரதி படைத்திருக்கலாம்.

கவிஞர்களைக் காலம் படைக்கிறது; கவிஞர்களும் காலத்தைப் படைக்கிறார்கள். எந்தக் கவிஞனும், தான் வாழ்ந்த காலத்தினாலும், சூழ்நிலையினாலும் தாக்கப்படாமலிருக்க முடியாது. வாழ்க்கையிலிருந்து அவனால் தப்பி ஓடிவிட முடியாது. கவிஞன், வாழ்க்கையிலே ஊன்றி நிற்பவன். அதன் பெருமையும் சிறுமையுமே அவன் வரையும் எழுத்தோவியங்கள். சமுதாயத்தில் காணப்படும் சிறுமையைக் கண்டு சீறுவான்; அல்லது சிரிப்பான். பெருமையைக் கண்டு பூரிப்பான்; அதனைப் போற்றிப் பேணுவான். தன் பாடற் கரத்தை நீட்டி அதனை அணைப்பான். இப்பண்புகளெல்லாம், அவன் படைப்பில் வெளிப்படையாகவும், சில சமயங்களில் குறிப்பாகவும் எதிரொலிக்கும். இந்தப் பொது நியதிக்கு எந்தக் கவிஞனும் விலக்கல்ல; பாரதியும் விலக்கல்ல. சுருங்கச் சொன்னால், ''இலக்கியம் என்பது வாழ்க்கையின் பிரதிபலிப்பே.'' இக்கருத்தினை ஆங்கிலப் புலவன் W. H. ஹட்ஸன் (Hudson) Literature is an expression of life through the Medium of language'' என்று உறுதிப்படுத்துகிறான். ''மொழியின் துணைகொண்டு வாழ்க்கையினை எடுத்துக் காட்டுவது இலக்கியம் என்பது அவன் கூற்று. இக்கூற்றின் கருத்தினை மாத்யூ ஆர்னல்ட் (Mathew Arnold,For the creation of literature two points must concour; the power of man and the power of environment] ''ஒரு நூலை எழுதுபவனுக்குப் படைப்பாற்றலும், சூழ்நிலையும் ஒத்து இருக்க வேண்டும்'' என்று வெளியிடுகிறான். எனவே, ஒரு கவிஞனைச் சமுதாய விஞ்ஞானி எனலாம்.

கருவிலே திருவுடையனாகப் பிறந்த பாரதி, ''என்றன் பாட்டுத் திறத்தாலே, இவ்வையத்தைப் 'பாலித்திட

வேணும்'' என்ற வரத்தையும், சிவசக்தியிடம் வேண்டிப் பெற்றவன். எனவே, பாரதியின் கவிதா சக்தி, எந்தத் திசையில் பாய்ந்தாலும், அதனை வளமாக்கவல்லது.

11-12-1882இல் எட்டையபுரத்தில் பிறந்த பாரதி 11-9-1921இல் சென்னைக் கடற்கரையில் அமரனானான். அவனது உடன்பிறப்பான சுதந்திரவேட்கை அவனை யெங்கெங்கெல்லாமோ விரட்டியடித்தது. அவனைப் போன்று சுதந்திரத் தாகம் கொண்ட திலகர், வ. உ. சி., சுப்பிரமணிய சிவா போன்ற தேசியவீரர்களுடன் தொடர்பு கொள்ளச் செய்தது. அதே சமயத்தில், மக்களிடம் காணப் பட்ட அச்சம், பேடிமை, அறியாமை, அடிமைத்தனம் போன்ற அவலங்கள், அவன் கண்களைக் குளமாக்கின. தேச பக்தர்களின் வீர முழக்கம் ஒரு புறம், ஒடுக்குண்ட மக்களின் ஓலம் மற்றொரு புறம், அநீதியின் ஆட்சி ஒருபுறம்; நீதியின் வீழ்ச்சி மற்றொரு புறம், அடிவருடிகளுக்குப் பதவிகள், பட்டங்கள் ஒரு புறம், அதட்டிக் கேட்பவர்களுக்குச் சிறை வாசமும் தூக்குக் கயிறும் மற்றொரு புறம், ஆட்சி செய்வோரின் பக்கத்தில் வளமை, ஆளப்படுவோரின் பக்கத் தில் வறுமை, ஆள்வோரிடம் பெருமை, ஆளப்படு வோரிடம் சிறுமை. இது, பாரதி தன் கண்முன் கண்ட பாரத நாட்டு நிலை. இது போன்றதொரு நிலை, எப்பொழுதாவது இப்பாரத நாட்டிலிருந்ததுண்டாவென, அவன் சிந்தனை வரலாற்றைப் பின்னோக்கிப் பார்க்கிறது. ''சூதர் சபைதனிலே தொல்சீர் மறக்குலத்து மாதர் திரௌபதியடைந்திருந்த நிலை'' அவன் கண்டநிலையோடு, பெருமளவு ஒத்திருந்தது.

ஆ! ஓர் ஒத்த சந்தர்ப்பம் கிடைத்துவிட்டது! இனிக் கவிதை வெள்ளம் பெருக்கெடுக்க வேண்டியதுதான். அந்தப் பாரதத் துணுக்கினைப் பற்றாகக் கொண்டு, அழகுணர்ச்சி, சந்தக்கட்டு, மெய்ப் பொருள் நாட்டம்,

சுவைக் கலவை போன்ற கூறுகளையள்ளி வீசிச் சிறிதளவு தமிழறிவு படைத்தவர்களும் படித்து மகிழக்கூடிய எளிய சொல்லில், 'பாஞ்சாலி சபதத்' தைப் படைத்துவிட்டான்.

துரியோதனன் அவையில் கனலிற் பிறந்த கனிமொழித் திரௌபதி முடக்கப்பட்டிருந்த அந்த நிலை ஆங்கிலேயன் ஆட்சியில் பாரதத்தாய் தன் நனலனழிந்து சிறை செய்யப் பட்டிருந்த அவல நிலையினை அவன் கண்முன் விரித்துக் காட்டுகிறது. பெண்மையினைத் தலைமையுடைத்ததாய்ச் செய்யத் துரியோதனன் சபையில், அன்று திரௌபதி எடுத்த சபதத்தை இன்று பாரதத்தாய் எடுத்துள்ளதாக அவன் உணர்வு விரிகிறது. அவ்வுணர்வின் ஆழத்தை ஐயமற்ற தெளிவான சொற்களால், காவியத்தின் இறுதியில் திரௌபதியினை வெளியிடச் செய்கிறான். (In Panchali's Strong protest and fearless Challenges, one may hear the voice of the out raged one insnlted India'› என்று ஓர் ஆராய்ச்சியாளர் இவ்வுண்மையினையெடுத்துக் காட்டுகிறார்.

பாண்டவர்களின் செல்வத்தைக் கொள்ளை கொள்ள முனைந்து நிற்கும் துரியோதனனைப் பாரத மக்களின் செல்வத்தைக் கொள்ளை கொண்டு செல்லும் ஆங்கிலேய னாகவும், துரியோதனன் ஆட்சி குரு நாட்டில் நீட்டிக்க வேண்டுமென்ற விருப்பில், அவனுக்குத் துணை போன கர்ணன் சகுனி போன்றவர்களை, ஆங்கிலேயனுக்கு 'வால்பிடித்த' தேசத் துரோகிகளாகவும், விதுரன், விகர்ணன், போன்றவர்களை அஞ்சா நெஞ்சம் படைத்த நியாயவாதிகளான திலகர், லஜபதி, போன்றவர்களாகவும் திரௌபதிக்கு விடுதலையளித்த கண்ணபிரானைப் பாரதத்துக்கு விடுதலையளித்த மகாத்மாவாகவும் நிரலே நிறுத்திக் கற்பனை செய்தால்; மேற்கூறப்பட்ட உண்மை எளிதிற் புலப்படும்.

ஒன்றுக்கொன்று முரணான குணங்களையும் செயல் களையுமுடைய கதாபாத்திரங்களின் நிலையில் நின்று

அவ்வப் பாத்திரமாகவே மாறிப் பாஞ்சாலி சபதத்தில் பாரதியால் பேச முடிந்ததற்குக் காரணம், அவன் பிறவிக் கவிஞனாவதால்.

வெற்றிச் செருக்குடன் பேசும் துரியோதனனும் தனது வில்லாற்றலின் ஆணவத்தால் ஆரவாரிக்கும் கர்ணனும் நீதியின் சார்பில் நின்று வாதிடும் விதுரனும் ''புலை நடையின்'' உருவமான குள்ளநரிச் சகுனியும் இரண்டும் கெட்டவனான திருதராட்டிரனும், பொறுமையின் அணிகலமான தருமனும், தருமனையும் சீறிச் சினக்கும் வீமனும் தன் வீரத்தின் எல்லையினை அடக்கத்தால் தொடும் விஜயனும் வாளேந்தாமல் வீரப்போர் செய்யும் திரௌபதியும் ஒரே கவிஞனுடைய சிந்தனையின் வடிவங்களே.

காப்பியங்கள், பெருங்காப்பியங்கள் சிறு காப்பியங்கள் என இருவகைப்படும். கடவுள் வாழ்த்தோடு; அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளைத் தரவல்லதாயும், தன்னிகரில்லாத் தலைவன் மேலதாய் நாடு, நகரம், மலை, கடல், காலம், சந்திரசூரிய அஸ்தமனம், மணம், முடிகவித்தல், புனல் விளையாட்டு, பொழில் விளையாட்டு, மந்திரம், தூது, போர், வெற்றி போன்ற உறுப்புக்களையுடையதாயும் ஒன்பான் சுவைகளும் விளங்க ஒருவகைப் பாடலினாலாயினும் பல்வகைப் பாடல்களாலாயினும் அமைக்கப் பெறுவது பெருங்காப்பியம். இவற்றுள் சில குறைவது சிறு காப்பியம். இந்த அளவின்படி ''பாஞ்சாலி சபதம்'' சிறு காப்பியமாகிறது: காப்பியத்துக்குள்ள உறுப்புக்களின் பெருமை, சிறுமைகளாலன்றிச் சொல்லும் பொருளாலும், திறத்தாலும், காப்பியங்களின் சிறுமை, பெருமைகள் கணிக்கப்படா.

தமிழில், கடைச் சங்கப் புலவர் பெருந்தேவனார் பாரதம், பாரத வெண்பா, வில்லிப்புத்தூரார் பாரதம், நல்லாப்பிள்ளை பாரதம், அஷ்டாவதானம் அரங்கநாதக் கவிராயர் பாரதம் போன்ற பல பாரதங்கள் உள. அவை

வடமொழி வியாச பாரதத்தின் வழிநூல் சார்பு நூல் களாகக் கொள்ளத் தக்கவை. இந்த வரிசையில் பாரதியின் ''பாஞ்சாலி சபதத்தினை'' வழி நூலாகவேனும் சார்பு நூலாகவேனும் கொள்ளத் தட்டில்லை.

பின்னோனான பாரதி முன்னோர் நூலின் முடிபினை யேற்றுத் தான் வேண்டும் விற்பங்களைக் கூறித் தன் காப்பியத்தை அமைத்துளனேனும், கதையினை நடத்திச் செல்லும் பான்மையிலும், சொற்றொடர்களின் ஆட்சி யிலும், கருத்துக்களின் வெளியீட்டிலும், வில்லிப் புத்தூராரைப் பெரும்பாலும் அடியொற்றிச் செல்கின்றான். சொற்களையாளும் போது மந்திரம் போற் சொல்லின்பம் வேண்டும் என்று விரும்புகிறான் பாரதி. அவ்விருப்பத் தினைப் ''பாஞ்சாலி சபதம்'' பெருமளவில் நிறைவு செய்திருப்பதனைச் சுவைஞர்கள் காண்பார்கள்.

இனிப் ''பாஞ்சாலி சபதம்'' என்ற நூலில் நுழைந்து எவ்வெவ்விடங்களில் வில்லிப்புத்தூராரைத் தழுவியும் எவ்வெவ்விடங்களில் அவரிடமிருந்து நழுவியும் பாரதி தன் காப்பியத்தை நடத்திச் செல்கிறானென்று பார்க்கலாம்.

வில்லிப்புத்தூரார், பாஞ்சாலி சபத வரலாற்றினைச் சபா பருவத்தில், சூது போர்ச் சருக்கம் என்ற பகுதியில் 283 விருத்தப் பாக்களால் விளக்கியுள்ளார். பாரதி ஆசிரியப்பா, விருத்தப்பா, நொண்டிச் சிந்துவென்ற இசைப்பா போன்றவற்றால், 1. அழைப்பு சருக்கம், 2. சூதாட்டச் சருக்கம், 3.அடிமைச் சருக்கம் 4. துகிலுரிதல் சருக்கம், 5. சபதச் சருக்கம் என்ற ஐந்து சருக்கங்களில் 308 பாக்களால் ''பாஞ்சாலி சபதத்தை'' முடிக்கிறான்.

பல சருக்கங்களின் தொடக்கத்தில் வில்லியார் பாரதத்தில் கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள் காணப்படு கின்றன. சில சருக்கங்களின் தொடக்கத்தில் காணப்பட

வில்லை. அவ்விடங்களில், மானசீகமாக் வழிபாடு செய்து கொண்டதால் பாடல் எழுதாமல் விட்டாரோ? பிற்காலத்தில், ஓலைச்சுவடிகளிலிருந்து பெயர்த்தெழுதுவோர்களால் விடப்பட்டனவோ? ஊகிக்க முடியவில்லை. எவ்வாறாயினும் சூது போர்ச் சருக்கத்தின் தொடக்கத்தில் அச்சுப் பிரதிகளில் கடவுள் வாழ்த்துப் பாடல் காணப்படவில்லை.

ஆனால், தான் வரையப் புகும் பாஞ்சாலி சபதத்தினைப் புதுக் காப்பியமாகக் கொண்ட பாரதி அதன் தொடக்கத்தில் காப்பியத்தின் முதல் இலக்கணமாகிய கடவுள் வாழ்த்தோடு தொடங்குகிறான்.

நாடகத்தில் கையாளப்படும் நொண்டிச் சிந்தென்னும் இசைப்பாட்டில் பாரதி தொடங்கும் கடவுள் வாழ்த்து முதலில் பரம்பொருளின் பொதுவியல்பினை,

"நாமமும் உருவும் அற்றே—மனம்
நாடரிதாய்ப் புந்தி தேடரிதாய்
"ஆம்" எனும் பொருளனைத்தாய்—வெறும்
அறிவுடன் ஆனந்த இயல்புடைத்தாய்"

என்று விளக்கிவிட்டு,

"இன்றமிழ் நூலிதுதான்—புகழ்
ஏய்ந்தினிதாய் என்றும் இலகிட"

வேண்டிக் கொண்டு தனக்கு எழுத்துக் கலையருளிய கலைமகளைத் தன் நூலுக்கு "ஏற்புடைக் கடவுளாக"ப் பாவித்து,

"வாணியைச் சரண் புகுந்தேன்—அருள்
வாக்களிப்பா ளெனத்திட மிகுந்தேன்
பேணிய பெருந்தவத்தாள்—நிலம்
பெயரளவும் பெயர் பெயராதாள்

**பூணியல் மார்பகத்தாள்—ஐவர்**
**பூவை திரௌபதி புகழ்க் கதையை**
**மாணியல் தமிழ்ப் பாட்டால்—நான்**
**வகுத்திடக் கலைமகள் வாழ்த்துகவே''**

என்று, தன் படைப்புக்கு ஆசியருளக் கோருகிறான்.

காப்பிய மரபுப்படி கடவுள் வாழ்த்துக்குப் பின்னர், நாட்டுச் சிறப்பு முதலிய உறுப்புக்கள் அமைய வேண்டும்.

சூது போர்ச் சருக்கம் நூலின் இடைப்பகுதியில் வருவதால், வில்லியார், இங்கு மேற்குறித்த சிறப்புக்களை எடுத்தோதத் தேவையில்லை. ஆனால் பாரதியின் "பாஞ்சாலி சபதம்" தனிக் காப்பியமாதலால் அதன் அமைதிக்கேற்பப் பாரதி நகரச் சிறப்பைப் பல படியாகப் பாராட்டி வரைந்துள்ளான்.

காப்பிய நிகழ்ச்சிகள் நடக்கும் இடமாகிய அத்தினாபுரத்தினை,

**''அத்தின புரமுண்டாம்—இவ்**
**அவனியி லேயதற் கிணையிலையாம்...''**

என்று வருணிக்கத் தொடங்கி முந்தை நூலுடையார் மரபுப்படி அந்தணர், அரசர், வணிகர், உழவர் முதலியோரின் இருக்கைகளையும், அவற்றின் சிறப்பியல்புகளையும் அழகு மிளிரப் பாடி,

**''இனிது இருந்திடும் தன்மையது எழில் நகரே''**

என்ற முத்தாய்ப்புடன் முடிக்கிறான்.

அஃறிணைப் பொருள்களாகிற, நால்-வகையினர்களின் இருப்பிடங்கள், அவர்களின் செல்வச் சிறப்புகள் முதலியவற்றினை மட்டும் அழகுறத் தீட்டி விடுவதுடன் கவிஞனின் கடமை முடிந்துவிடாது. ("Literature is born out of life; it is intended for life") 'வாழ்க்கையிலிருந்து இலக்கியம்

பிறக்கிறது. அது வாழ்க்கைக்கே தேவைப்படுகிறது'' என்ற தேவையினையும், அவன் பூர்த்தி செய்ய வேண்டும். அது தான் இலக்கியத்தின் தலையாய கடமை.

ஓர் இலக்கிய கர்த்தா, மக்கள் சமுதாயத்தின் மூலை முடக்குகளிலெல்லாம் நுழைந்து, அங்குக் காணப்பெறும் கோணல் மாணல்களையெல்லாம் அலசி ஆராய்ந்து, குணம் நாடிக் குற்றமும் நாடி, நல்லதொரு சமுதாயம் அமைய வழிகாட்டும் துணைவனாக வேண்டும். ஓர் இலக்கிய கர்த்தா சமுதாய நீதிபதியாகவும் மருத்துவனா க்வும் கூடச் செயற்பட வேண்டும்.

இப் பெரும் பணியினைப் பாரதி எப்போதும் மறந்த தில்லை.

சமுதாயமென்பது, ஒரு கலப்படப் பிண்டம். அது, என்றுமே முழுக்க முழுக்க நல்லதாகவோ, முழுக்க முழுக்கத் தீயதாகவோ இருந்ததில்லை. வேண்டுமானால் அது ஒரு காலத்தில் அறக்கோட்பாடுகள் மிகுதியாகக் கொண்டிருந்ததென்றும், அவை, பிற்காலத்தில் குறைந்து விட்டனவென்றும் கூறிச் சான்றுகள் காட்டலாம். அறக் கோட்பாடுகள் வரவரச் சரிவுறுவதற்குக் காரணங்கள் பலவுண்டேனும், அவ்வக் காலங்களில் வாழும் மக்கள் வாழ்க்கையினைக் காணும் கோணமும் அணுகுமுறையும், அவர்களுக்கேற்படும் புறத்தாக்குதல்களுமே முந்துறு காரணங்களாகும்.

பாரதியின் கண்முன் அவன் நேரிற்காணும் பாரத சமுதாயம் நிற்கிறது. அவன் பேசப்புகும் அத்தினாபுர மக்களின் சமுதாயமும் அவன் மனக்கண் முன் எழுகிறது. இரண்டு வேறுகாலச் சமுதாயங்களும் சில அம்சங்களில் ஒத்திருப்பதாகக் கருதுகிறான். கொள்கைகளில் இன்றும் முரண்பாடுகள், அன்றும் முரண்பாடுகள்! இன்றும் செயல் களில் போலித்தனம்; மோசடிகள்! அன்றும் அப்படியே!

இவற்றினைச் சுட்டிக்காட்ட அத்தினாபுர மக்களைப் பற்றிப் பேசும் போது,

சிந்தையில் அறமுண்டாம்—எனில்
சேர்ந்திடும் கலி செயும் மறமுண்டாம்
மெய்த்தவர் பலருண்டாம்—வெறும்
வேடங்கள் பூண்டவர் பலருண்டாம்;
உய்த்திடு சிவ ஞானம்—கனிந்து
ஓர்ந்திடு மேலவர் பலருண்டாம்
பொய்த்த இந்திர சாலம்—நிகர்
பூசையும் கிரியையும் புலை நடையும்
கைத்திடு பொய்ம் மொழியும்—கொண்டு
கண் மயக்கால் பிழைப்போர் பலராம்''

என்று காட்டுகிறான்.

அறவுணர்வும் மறவுணர்வும், மெய்த்தவமும் பொய்த் தவமும், மெய்ஞ்ஞானமும் அஞ்ஞானமும், உண்மையும் போலியும், அசத்தியமும் சத்தியமும், சுறுசுறுப்பும் சோம்பலும் முறைமுறையே நலிந்தும், மலிந்தும் விரவிக் கிடக்கின்ற இன்றைய சமுதாயத்தைத்தான், பாரதி இங்குக் குறிப்பாகச் சுட்டுகிறானா? பாரத காலச் சமுதாயத்தைத் தான் படம் பிடித்துக் காட்டுகிறானா? என்று ஐயப்பட வேண்டியிருக்கிறது.

இத்தகைய சமுதாயத்துக்கு மன்னன்...... வாளரவக் கொடியுயர்த்து நின்ற துரியோதனப் பெயரான் நெஞ்சத் துணிவுடையான்; முடி பணிவறியான்; கரியோர் ஆயிரத்தின் வலி காட்டிடுவோன் என்று அறிமுகப் படுத்துகிறான்.

பாரதி, மேற்கண்ட சில வரிகளுக்குள்ளே, கருத்தாழம் கொண்ட சில சொற்களாலே, துரியோதனனின் முழுவியல்பு களையும் சித்திரம் தீட்டி விடுகிறான்.

பாம்பு, தன்னுள் நஞ்சினையுடையது, இரட்டைநாக்குப் படைத்தது. அதுபோல் துரியோதனனும் பாண்டவர்பால்

நஞ்செண்ணம் கொண்டவன்; முன் சொன்னதைப் பின்னால் மறுத்துச் சொல்லும் இரட்டை நாக்குப் படைத்தவன் என்று கருத்துக்களையுள்ளடக்கி, ''வாளரவத்தை'' துரியோதனனது கொடியுடன் கூட்டியெழுதுகிறான். துரியோதனன் கொடியில் 'அரவக்குறி' பொறிக்கப் பெற்றுள்ளது. அது தன் தலைவனின் இயல்புகளையும், அரவத்தினைக் கொடியிற் கொண்ட அறிவின்மையையும், வானிலிருந்து பறைசாற்றுவது போல் உயர்ந்து பறக்கின்றது என்ற தொனிப் பொருளும், இங்கு இழையோடுகிறது. நெஞ்சத்துணிவுடையான்'' என்ற தொடரால், நீதி அநீதி பாராமல் தான் கொண்ட கருத்தினை எவ்வாற்றானும் செய்து முடிக்கும் நெஞ்சுரம் கொண்டவன் என்பதனையும், ''முடிபணி வறியான்'' என்பதால் யாரையும் மதிக்கும் இயல்பினன் அல்லன் என்பதனையும், ''கரியோர் ஆயிரத்தின் வலி காட்டிடுவோன்'' என்பதால், அவன் இழைக்கும் கொடுமைகளுக்கும், நெஞ்சத்துணிவுடைமைக்கும், முடிபணியாமைக்கும் காரணம், ஆயிரம் யானைகளின் பலத்தைக் கொண்டிருந்த ஆணவமேயாம் என்பதனையும் விளக்கிவிடுகிறான். இந்த நான்கு வரிகளுக்குள்ளேயே, துரியோதனனின் நெடிய சரித்திரத்தைச் சுருக்கிக் காட்டிவிடும் பாரதியின் கவித்திறம்தான் எப்படிப் பட்டது.

ஆனால், வில்லிபுத்தூராரோ, சில தனிப்பாடல்களால் துரியோதனனின் இயல்புகளை விளக்க விரும்பாமல் தம் நூல் முழுவதும் ''தேள்களின் கொடியவன்,'' ''தீங்கு ஒரு வடிவமாம் திறல் சுயோதனன்,'' ''கோள் அரவினை அனை கொடிய நெஞ்சினன்,'' ''பாவி,'' ''துன்மதி சுயோதனன்,'' ''முறைமை மாறினான்,'' ''பாதகன்,'' ''பொய்யே மலர்ந்த திருமுகத்தான்,'' ''அறிவிலாச் சுயோதனன்'' போன்ற சொற்றொடர்களால், ஆயிரமாயிரம் இடங்களில், அவன் இயல்புகளை நினைவுபடுத்திக் கொண்டே செல்கிறார்,

இந்தத் துராத்மா, இந்தப் பாரதப் புண்ணிய பூமியில் பிறப்பதனை, இறைவனின் திருமேனியாகிய இயற்கையே விரும்பவில்லையென்பதனை வில்லியார்,

**''வாரியின் அதிர்ந்து விம்மும், மங்கல முழவம் மேன்மேல்**
**ஓரியின் குரலால் ஓதை ஒடுங்கின; இடங்கள் தோறும்**
**பாரிய குலத்தோர் கண்ணின் உவகை நீர் பணிக்கும் முன்னே**
**சோரி அந்தரத்தினின்றும் சொரிந்தது சோனை மேகம்''**

என்று பேசுகிறார்.

துரியோதனன் பிறந்தபோது ஒலிக்கப் பெற்ற மங்கல வாத்தியங்களின் ஒலிகள் கீழடங்குமாறு நரிகள் ஊளையிட்டனவாம்; நல்லவர்கள் ஆனந்தக் கண்ணீர் விடுமுன்னே மேகங்கள் ரத்தக் கண்ணீர் சொரிந்தனவாம். இங்ஙனம், துரியோதனன் பிறப்பின் 'சிறப்பினை'க் குறிப்பாகச் சொல்லி விளங்க வைத்தலானது, வில்லிபுத்தூராரது கவித் திறத்தைப் புலப்படுத்துகிறது. துரியோதனனது தீயவியல் புகளாகிற நெடுங்காட்டினுக்கிட்டுச் செல்லும் ஒற்றையடிப் பாதையாக மேற்கொண்ட செய்யுள் அமைந்துள்ளது.

துரியோதனன் படைத்துள்ள தீக்குணங்களாகிற படைக் கலங்கள் அனைத்தையும், அவன், பாண்டவர்களாகிய ஓர் இலக்கின் மேலேயே, பிள்ளைப் பிராயத்திலிருந்தே விடுக்கத் தொடங்கி விடுகிறான். இப்படி, அவன், பாண்டவர்களைத் தன் பகைவர்களாகக் கொண்டு விட்டதற்குக் காரணம், அவர்கள்பால் அவன் உள்ளத்தரும்பிவிட்ட, அழுக்காறே யாம். இந்த அழுக்காறெனும் நச்சுக் கொடி, நாளடைவில் அவன் உள்ளத்தில் மாமரமாகத் தழைத்து விடுகிறது. அந்த அழுக்காற்றின் விளைவாகவே, வில்லியும் பாரதியும் விரிவாகப் புகலும் சூது போரும், பாஞ்சாலி சபதமும் எழுகின்றன.

இந்திரப் பிரத்த நகரில், தருமன் இராச சூய வேள்வி செய்கிறான். அதற்குத் துரியோதனன் தன் தம்பிமார்

களுடனும், துணைவர்களுடனும், சென்று மீள்கிறான். இந்திரப் பிரத்தத்தில், தருமனுக்குக் கிடைத்த இந்திர போகமும், குபேரச் செல்வமும், வாடாப் புகழ் மாலைகளும் துரியோதனனின் அழுக்காற்றினைக் குத்திக் கிளப்பி விடுகின்றன. இந்திரப் பிரத்தத்துக்குப் புறப்படு முன்னர், அவன் உள்ளத்தில் பிஞ்சாயிருந்த பொறாமையின் பேயாட்டத்தினை அவனால் தாங்கக் கூடவில்லை. அத்தினாபுரம் மீண்ட அடுத்தநாளே, அவையினைக் கூட்டுகிறான். இதனை வில்லிபுத்தூரார்,

> **''சென்றுழி எவரும் தம்தம் செழுமனை எய்தி, வாசம்**
> **துன்றிய அமளி, கங்குல் துயில் புரிந்து, எழுந்த பின்னை,**
> **நின்ற வெம் பருதித் தோற்றம் தொழுது, தம்நியமம்முற்றி**
> **வன்திறல் அரசன் கோயில் மன்னவை வந்து சேர்ந்தார்''**

[பருதித் தோற்றம், சூரியன் தோன்றல்]

என்று குறிப்பிடுகிறார்.

அவை கூடி விட்டது. துரியோதனன் என்ன பேசப் போகிறான் என்பதனைக் கேட்க, யாவரும் தத்தம் காதுகளைத் தீட்டிக் கொண்டிருக்கிறார்கள். எப்படித் தொடங்குவதென்று தெளியாமையாலோ, துக்கம் தொண்டையினை யடைத்து விட்டதாலோ துரியோதனனால் பேச முடியவில்லை. மௌனம் சாதிக்கிறான். இதனைக் கவி,

> **''நினைவினோடு இருந்த போதில்''**

(வாய் திறவாமல், யோசனையுடன் அமர்ந்திருந்த சமயத்தில்)

என்று குறிப்பாகக் காட்டுகிறார்.

''பாம்பின் கால் பாம்பறியும்'' என்ற பழமொழிப்படி, துரியோதனனுடன் நெடுங்காலம் பழகி, அவன் உள்ளப் போக்கினை நன்கறிந்துள்ள கன்னன், சகுனி, துச்சாதனன் ஆகிய மூவரும், அந்தச் சமயத்தில், துரியோதனன் உள்ளத்

*தினை அரிக்கும் எண்ணம் யாதென ஊகித்தவர்களாய்ப் பேசுகின்றனர். அவர்கள் ஊகம் சரியானதாகவே இருந்து விட்டதென்பதனை,*

**"வேந்தர் வேந்தன் இதயமும் ஒன்றாய் நின்ற"**

*(வேந்தர் வேந்தன்—துரியோதனன்)*

*என்று புலப்படுத்துகிறார் வில்லி.*

*"பாண்டவர்களை வளர விடுதல் கூடாது; அழித்து விடல் வேண்டும்; அப்பொழுதுதான் துரியோதனன் வாழ்வு சிறப்புறும்" என்பது, அம் மூவரும் வெளியிட்ட கருத்து. துரியோதனன் எண்ணமும் அதுவே!*

*அதுகாறும் மௌனமாயிருந்த துரியோதனன், தன் எண்ணத்துக்கு ஆதரவு கிடைத்தவுடன், அவையிலிருந்து,*

**"அமைதரு தந்தை கேட்ப, அவன் பெரும் தாதை கேட்ப**
**கமைபெறு விதுரன் கேட்ப, கார்முகக் கன்னன் கேட்ப,**
**இமையவன் துரோணன் கேட்ப, யாவரும் கேட்பச்**
**சொல்வான்"**

*(கமை—பொறுமை, பெருந்தாதை—பீஷ்மன்*
*இமையவன்—தேவன் போன்ற)*

*என்ன சொல்கிறான்?*

**"வஞ்சனை கொண்டே ஆதல், வாரணம், மணித்தேர்,**
**வாசி,**
**நஞ்சனை யவரால்ஆதல் நாளையேஅழித்தல் வேண்டும்"**

*(வாரணம்—யானைப்படை, வாசி—குதிரைப்படை,*
*நஞ்சு அனையவரால் ஆதல்—விடம் ஒத்த*
*காலாட்படை)*

*என்கிறான்.*

வஞ்சனை வழியாமல் பாண்டவர்களை வெல்லக் கன்னன் உடன்படாமல், போர் வழியால் வெல்ல வேண்டும் என்கிறான். கன்னன் கருத்தினை மறுத்த சகுனி,

**''இப்பிறப் பொழிய, இன்னும் ஏழெழு பிறப்பினாலும்**
**மெய்ப் பிறப்பற்ற நீதித் தருமனை வெல்ல மாட்டோம்;**
**ஒப்பறப் பணைத்த தோளாய்! உபாயம் எங்கேனும் ஒன்றால்**
**தப்பறச் சூது கொண்டு சதிப்பதே கருமம் என்றான்''**

(மெய்ப்பு இறப்பு அற்ற—சத்தியம் தவறாத)

'அறம் காத்து நிற்கும் தருமனைப் போரில் வெல்ல முடியாது; சூது வழியினாற்றான் வெல்ல வேண்டும்' என்று திட்டமாகச் சகுனி விளம்புகிறான். கன்னன் காட்டிய வழியினும், சகுனி சுட்டிய வழியே எளியதாகவும், வெற்றி தர வல்லதாகவும் தோன்றவே, துரியோதனன், சகுனியுடன் தனித்துப் பேசி, ''சூது வழி யாதென?'' வினவுகிறான்.

''புதியதாக ஒரு மண்டபம் எழுப்ப வேண்டும். அதைக் காண வருமாறு தருமனை யழைத்தால், அவன் வருவான்; மண்டபம் கண்டு மகிழ்ந்த பின்னர்ப் ''பொழுது போக, அண்டரும் விரும்பும் சூது ஆடுதும், வருக'' என்றால் அவன் வருவான். நான் அவனுடன் சூதாடி, அவனுடைய ''வாழ்வும், மேதகு அரசும், தங்கள் பதிமுதல் பலவும் கவர்வேன்'' என்று, சகுனி தன் திட்டத்தை விளக்குகிறான்.

சகுனியின் விளக்கத்தைக் கேட்ட துரியோதனன், தான் அப்பொழுதே பாண்டவர்களை அழித்து விட்டதாகக் கற்பனை செய்து கொண்டு களித்து சபையில் ஒருபால் அமர்ந்திருந்த விதுரனிடம், சகுனியின் திட்டத்தை அறிவிக்கிறான். சினம் கொண்ட விதுரன், துரியோதனனையும், சகுனியையும், அவர்களின் வஞ்சனையெண்ணங்களுக்காக வன்மையாகக் கண்டிக்கிறான். சங்குத்

துரியோதனனுக்கும் விதுரனுக்குமிடையே சூடான வாக்கு வாதம் நடக்கிறது. (அது உரியவிடத்தில் விளக்கப் பெறும்) முடிவில், விதுரன் அவையை விட்டு வெளி நடப்புச் செய்கிறான். அவைக்கண்ணிருந்த மற்ற பெரியோர்கள் பேசியதாகக் குறிப்பில்லை. இவை வில்லியார் தரும் தொடர்ச் செய்திகள்.

இங்கு வில்லியாருக்கும் பாரதிக்கும் வரலாற்றினைச் சொல்லிச் செல்லும் போக்கிற் காணப்படும் சில வேற்றுமைகள் கீழே சொல்லப்படுகின்றன.

தருமன் நிகழ்த்திய இதிகாச சுயவேள்வியிற் கலந்து கொண்டு, இந்திரப் பிரத்த நகரினின்றும் மீண்ட துரியோதனன், மறுநாள் சபை கூட்டியதாகவோ, அதில் கன்னன், சகுனி, துச்சாதனன் ஆகியோர் பேசியதாகவோ, தருமனுடன் சூது போர் செய்யவொரு மண்டபம் எழுப்ப வேண்டுமென்று அப்போது சகுனி யோசனை கூறியதாகவோ, சகுனியின் கருத்தினைக் கேட்ட விதுரன் வெகுண்டு, துரியோதனனுடன் மோதிக் கொண்டு, அவையினை விட்டு வெளியேறியதாகவோ, பாரதி பேசவில்லை.

## பாரதியின் "பாஞ்சாலி சபதம்" செல்லும் பாங்கு :

இந்திரப் பிரத்தத்தினின்றும் அத்தினாபுரிக்கு மீண்ட துரியோதனன் தனித்திருக்கிறான். அவன் உள்ளம், இராசசூய வேள்வியிற்கண்ட காட்சிகளை நினைத்து அசைபோடுகின்றது. தருமன் பெற்ற சிறப்புகள், அவன் அழுக்காற்றினைத் தூண்டி விடுகின்றன. அழுக்காறு, அவாவாக விரிந்து, அவா சினமாகக் கிளைக்கின்றது. இதனைப் பாரதி,

> "கண்ணிலாத் திருதராட்டிரன் மைந்தன்
> காய்ந்த நெஞ்சுடன் எண்ணுவ கேளீர்!"

என்று, துரியோதனன் எண்ணுவனவற்றைக் கேட்குமாறு நம்மைக் கோருகிறான் பாரதி.

பொறாமை ஒருவன் உள்ளத்தில் புகுந்து விட்டால், அது எவ்வளவு வன்மையுடையவனையும், எப்படித் தாழச் செய்து விடுமென்பதனைப் பாரதி, துரியோதனன் நிலை யுடன் நோக்கி,

**"வன்திறத்தொரு கல்லெனும் நெஞ்சன்**
**வானம் வீழினும் அஞ்சுதல் இல்லான்,**
**குன்ற மொன்று குழைவுற்றிளகிக்**
**குழம்பு பட்டு அழிவெய்திடல் போல.........**
**நெஞ்சத்துள்ளோர் பொறாமை யெனும்தீ**
**நீள்வதால் உள்ளம் நெக்குருகிப் போய்**
**பஞ்சை யாமொரு பெண்மகள் போலும்**
**பாலர் போலும் பரதவிப் பானாய்......"**

அழிவுறுகிறான் என்று, பேசுகிறான்.

மனிதவுள்ளம் 'சார்ந்ததன் வண்ணமாகும்' என்பர் உளநூலறிஞர். இவ்வுண்மையினுக் கெடுத்துக்காட்டாக, "நெஞ்சத்துணிவுடையான்", "முடிபணிவறியான்", "கரி ஓர் ஆயிரத்தின் வலி காட்டிடுவோன்" என்றெல்லாம் அறிமுகம் செய்யப் பெற்ற துரியோதனன், இழிந்த குணங் களுக்கெல்லாம் இழிந்த குணமாகிற "அழுக்காறு எனும் பாவிக்கு"த் தன் உள்ளத்தில் இடமளித்த பேதைமையால், குன்றம் குழைந்து விட்டது போலும், பெண்மகள் போலும், பாலனைப் போலும், மனவுறுதி குலைந்து தாழ்வுறுகிறான்.

அந்நிலையில், துரியோதனன் உள்ளக் கடலில் கொந்தளித்தெழுந்த பொறாமை அலைகளின் முழு வீச்சி னையும், இருபதுக்கும் மிகுதியான இசைப் பாடல்களால் பாரதி இனிது காட்டுகிறான். இங்கு, வில்லியார் தொட்டுக் காட்டுவதனைப் பாரதி பிட்டுக் காட்டுகிறான். பாரதியின் எழுதுகோலின் எழில் நடனம், பாஞ்சாலி சபதத்தினைப் படிப்போருக்கு, இவ்விடத்தில் ஒரு பெரு விருந்து படைக் கிறது. சொற்கள் அடுக்கடுக்காக, அகராதியில் வருவன போன்று, உருண்டோடி வருகின்றன,

தன்னினும் மிக்கவராய்ப் பாண்டவர்கள் தலைநிமிர்ந்து நிற்பது, தன் மாட்சிக்கு எதிராக விடப்பட்ட 'சவால்' அல்லவா? அந்த நிலையினை வளர விடலாமா?

''பாண்டவர் முடியுயர்ந்தே—இந்தப்
பார்மிசை யுலவிடு நாள்வரை நான்
ஆண்டதொர் அரசாமோ? எனது
ஆண்மையும் புகழுமோர் பொருளாமோ?''

என்றெண்ணிப் புழுங்குகிறான் துரியோதனன்.

அவன் சிந்தனை விரிகிறது, தருமன் செய்த இராச சூய வேள்வியின் முழு வெற்றிக்கும் காரணம் சிறப்பாக விசயனுடைய வில்லாற்றலும், வீமனுடைய தோளாற்றலுமே யாம். இவர்களிருவரது பேராற்றலின் துணையாற்றானே, பல மன்னர்களை வெல்லவும், அவர்களது செல்வங்களைத் திறை கொள்ளவும் முடிந்தது. இந்த இரட்டையர்களைப் போன்ற மாவீரர்கள் தன் பக்கலில்லையே? அவர்கள் இருவரையும் காணுந்தோறும் தலைக்குனிவு ஏற்படுகின்றதே?

''காண்டகு வில்லுடை யோன்—அந்தக்
காளை யருச்சுனன் கண்களிலும்
மாண்டகு திறல் வீமன்—தட
மார்பிலும் என திகழ்வு வரைந்துளதே!''

''விசயனுடைய வெற்றிப் பார்வையிலும், வீமனுடைய கல்தோளிலும் தனது தாழ்வு—தோல்வி—சாசனம் செய்யப் பட்டுள்ளதாகக் குமைகிறான். இந்த இரண்டு புள்ளிகளைப் பற்றித்தான் துரியோதனன் அஞ்சுகின்றானேயன்றி, மற்ற வர்களைப் பற்றி அவன் கருதவில்லை. தருமனைப் பற்றி, ''வீரமிலாத் தருமன்'' என்கிறான்.

''கிழவியர் தபசியர் போல்—பழம்
கிளிக்கதை படிப்பவன், பொறுமையென்றும்
பழவினை முடிவென்றும்—சொலிப்
பதுங்கி நிற்போன், மறத் தன்மையிலான்,
வழவழத் தருமன்''

''தருமன் வெற்று வேதாந்தம் படிப்பவனாம்; கோழை யாம்; விளக்கெண்ணெயில் வளரும் வெண்டைக்காயாம்;'' இவை தருமனுக்கு மாமன்னனுமாகிய தன் முன், இந்த ''சாமியார்'' சாம்ராட்டாகி விடுவதா? இதனை ''எப்படிப் பொறுத்திடுவேன்?'' என்று துணிந்து, ஒரு முடிவுக்கு வருகிறான். தன் நெஞ்சினையே வினவுகிறான் துரியோதனன்.

''யாது நேரினும், எவ்வகையானும்,
யாது போயினும், பாண்டவர் வாழ்வைத்
தீது செய்தும் மடித்திட''

முடிவு செய்கிறான்.

''மோதுறப் பொருதே ஆதல், மொழியொணா வஞ்சம் ஒன்று
தீதுறப் புரிந்தே ஆதல் கொள்வதே சிந்தை''

[மொழியொணா — வாயாற் சொல்லுதற்கும் கூடாது கொடுமை]

என்ற, வில்லிவாக்கின் எதிரொலி, பாரதியின் சொற்களில் இங்குத் தெளிவாகக் கேட்கிறது. தன் முடிவினைச் செயற் படுத்தி வெற்றிதர வல்லவன், தன் மாமன் சகுனி ஒருவனே என்று கண்டு, துரியோதனன்,

''சூதும், பொய்யும் உருவெனக் கொண்ட
துட்ட மாமனைத்தான் சரண்''

செய்கிறான்.

சகுனியின் முழுவடிவினையும் ஒரு சிறு சொற் சித்திரத் தான் இங்குப் பாரதி நம் முன் காட்டி விடுகிறான்.

''தக்கோர் ஆடாச் சூதினுக்கும், நிலை வஞ்சனைக்கும்
யாரே இவற்கு நிகர் தரணியரில்?''

என்னும் சகுனியைப் பற்றி, வில்லியாரின் வாக்கும் இங்கு நினைவு கூர்தற்குரியது.

*சகுனியைச் சரணடைந்த துரியோதனன்,*

''மன்னர் மன்னன் யுதிட்டிரன் செய்த
　　மாமகத்தினில் வந்து பொழிந்த
சொன்னம், பூண், மணி, முத்தியைக் கண்டும்
　　தோற்றம் கண்டும், மதிப்பினைக் கண்டும்,
என்ன பட்டது தன்னுளம் என்றே
　　ஈன மாமன் அறிந்திடும் வண்ணம்
முன்னம் தான் நெஞ்சிற் கூறிய வெல்லாம்
　　முடன் பின்னும் எடுத்து மொழிந்தான்''
(சொன்னம்—பொன்)

*துரியோதனன், சகுனியைப் புகலடையும் வரையில், தனித்திருந்த போது, அவனுடைய சிந்தனையிலெழுந்த எண்ணங்களே, பாரதியின் வாக்காக இங்குக் கூறப் பெற்றுள்ளன. துரியோதனன் தனித்துச் சிந்தித்ததாக வில்லியார் கூறவில்லை.*

*தன் உள்ளத்தினை நெருஞ்சி முட்களாகக் குத்திக் கொண்டிருந்த எண்ணங்களையெல்லாம் துரியோதனன், சகுனி முன் கொட்டித் தீர்க்கிறான். பாண்டவர்கள் பெற்ற செல்வக் குவியல்களையும், புகழ்களையும் விட, அவனைத் தாக்கிய செயல்கள், கண்ணனுக்கு வேள்வியில் முதல் தாம்பூலம் அளித்தது; சிசுபாலனைக் கண்ணன் கொன்றது; இவற்றினைவிட அவன் மண்டபத்தில் வழுக்கி விழுந்த போது,*

''........................சபை
　　தன்னில் விழுந்து நான்—அங்கு
மூர்ச்சை யடைந்தது கண்டனையே!
　　என்றன் மாமனே!
ஏச்சையும் அங்கவர் கொண்ட
　　நகைப்பையும் எண்ணுவாய்—அந்த
ஏந்திழையாளும் எனைச் சிரித்
　　தாளிதை எண்ணுவாய்''

என்று சொல்லும் போது, அவமானத்தின் எல்லையினை யடைந்துவிட்ட. ஒருவனது மனவுளைச்சலைத் துரியோதனனது வேதனைச் சொற்களில் நன்கு கேட்க முடிகிறது. மற்றக் குற்றங்களையெல்லாம் மறந்தாலும் மன்னித்தாலும், ஒரு பெண்பால்—திரௌபதி—தன்னைப் பார்த்து, மன்னனாகிற தன்னைப் பார்த்து, அதற்கு மேலும் தன்னைப் பார்த்துச் சிரித்ததனைப் பழி வாங்காமல் எவ்வாறு துரியோதனனால் விட முடியும்.

இங்ஙனம் ஒரு பெரிய குற்றப் பட்டியலைப் பாண்டவர்கள் மீது தயாரித்துத் துரியோதனன் சகுனி முன் நீட்டியதற்குக் காரணம், சகுனி தெரிந்து கொள்வதற்காகவல்ல. எண்ணெய் வார்க்காமலே எரியக் கூடியவொரு தீப்பந்தம் சகுனி. பின், எதற்கெனின் பாண்டவர்கள்மீது அன்பு கொண்ட விழியிலாத் தன் தந்தை திருதராட்டிரனிடம், அவர்கள் செய்த குற்றங்களைச் சகுனி அடுக்கடுக்காக எடுத்துச் சொல்லிப் பாண்டவர்கள்மீது அவன் கொண்டுள்ள அன்பினை மாற்றித் தன் வழிக்கு அவனை இழுப்பதற்கேயாகும்.

''மிதமிகும் அன்பு அவர்மீது
கொண்டானவன் கேட்கவே...
இதனையெலாம் அவ்விழியற்ற
தந்தையின் பாற் சென்றே—சொல்லி,
இங்கிவர்மீது அவனும் பகை
எய்திடச் செய்கு வாய்''

என்று, துரியோதனன் சகுனியிடம் பேசியதாகப் பாரதியின் வாக்குக் காட்டுவதிலிருந்து அறியலாம்.

தன் தந்தை திருதராட்டிரனிடம், சகுனி என்னென்ன சொல்ல வேண்டும் என்பதனுடன், துரியோதனன் நிறுத்திக் கொள்ளவில்லை.

தன் முடிவு யாதென்பதனையும், அதனைச் செய்து முடிக்கச் சகுனி உதவ வேண்டுமென்பதனையும்,

''பேச்சை வளர்த்துப் பயனொன்றும்
இல்லை யென் மாமனே!—அவர்
பேற்றை அழிக்க உபாயம் சொல்லுவாய்
என்றன் மாமனே!
தீச் செயல், நற்செயல் ஏதெனினும்
ஒன்று செய்து நாம்—அவர்
செல்வம் கவர்ந்து அவரை விட
வேண்டும் தெருவிலே''

என்று தெளிவாகச் சொல்லி முடிக்கிறான்.

தனித்திருந்த சகுனியிடம், மேற்கண்ட செய்திகளைத் துரியோதனன் தெரிவித்ததாகப் பாரதி கூற, சபையிலேயே அவன அவற்றினை வெளியிட்டதாக, வில்லிபுத்தூரர் குறிப்பிடுகிறார்.

வெறும் வாயினை மெல்லுபவனுக்கு ஒரு வாய் அவல் கிடைத்தால் விடுவானா? தீமை செய்யச் சமயம் தேடிக் கொண்டிருந்த சகுனிக்கு இப்போது சமயம் வந்து எதிர் நிற்கிறது. அதனை நழுவ விடாமல் பற்றிக் கொண்டு துரியோதனனைப் பார்த்து,

''.......................அட!
இன்று தருவேன் வெற்றியே—இங்கு
இத்தனை வீண் சொல் வளர்ப்பதேன்?''

என்ற பீடிகையுடன், தொடங்குகிறான்.

பாண்டவர்களின் வலிமையினையும், துரியோதனாதியர்களின் பலத்தையும் நன்கு எடை போட்டு வைத்திருக்கிறான், சகுனி. அதனாலேயே,

''வெஞ்சமர் செய்திடு வோமெனில்—அதில்
வெற்றியும் தோல்வியும் யார் கண்டார் அந்தப்
பஞ்சவர் வீரம் பெரிது காண்—ஒரு
பார்த்தன் கை வில்லுக் கெதிருண்டோ?''

என்று அச்சமூட்டி, 'பார்த்தனுக்கு எதிருண்டோ?' என்று வினவும் முகத்தால், பாண்டவர்களை நேரிடப் போரில் வெல்ல முடியாதென்பதனைத் தெளிவுபடுத்தி அவர்களை நிச்சயமாக வெல்லும் உபாயம் யாதென்பதனையும், அதனைச் செய்து முடிக்கும் வழி யாதென்பதனையும்,

''ஒன்றுரைப்பேன் நல் உபாயம்தான்—அதை
ஊன்றிக் கருத்தொடு கேட்பையால்—ஒரு
மன்று புனைந்திடச் செய்தி நீ—தெய்வ
மண்டப மொத்த நலங் கொண்டே''

''மண்டபம் காண வருவீரென்று—அந்த
மன்னவர் தம்மை வரவழைத்து—அங்குக்
கொண்ட கருத்தை முடிப்பவே—மெல்லக்
கூட்டி, வன் சூது பொரச் செய்வோம்—அந்த
வண்டரை நாழிகை யொன்றிலே—தங்கள்
வான் பொருள் யாவையும் தோற்றுனைப்—பணி
தொண்ட ரெனச் செய்திடுவான் யான்—என்றான்
சூதின் வலிமை அறிவை நீ''

(வண்டவர்—கீழோர்)

என்று தெளிவாகச் சொல்லி முடிக்கிறான்.

சகுனியின் வாக்காகப் பாரதி மேற்சொன்ன கருத்துக்களைப் பெரும்பாலும் ஒட்டியே வில்லியார் பேசினாலும், பேசிய இடமும், சமயமும்தான் வேறு. மேற்கண்ட, துரியோதனன், சகுனி ஆகிய இருவரது உரையாடல்களும், சபையில் நிகழ்ந்தனவென்பது வில்லியார் படைப்பு; தனிமையில் நிகழ்ந்தனவென்பது பாரதியின் கணிப்பு.

கத்தியின்றி ரத்தமின்றிப் பாண்டவர்களை எளிதில் வெல்லும் உபாயத்தினைக் கூறிய மாமனுக்குத் தன் மகிழ்ச்சியினைக் காட்ட,

"இங்கிது கேட்ட சுயோதனன் மிக
இங்கிதம் சொல்லினை மாமனே!" என்று
சங்கிலிப் பொன்னின் மணியிட்ட—ஒளித்
தாமம் சகுனிக்குச் சூட்டி"ப்

பாராட்டுகிறான். பாரதியினை அடியொற்றி, இங்கு வில்லியார்,

"கோமகன், நெஞ்சும் நாவும்
குளிர்ந்து, பேர் உவகை கூர்ந்து,
மாமனைத் 'தாவிசின் கண்ணே
வருதி' என்று இருத்திக் கொண்டான்"

'தன் அரியாசனத்தில், சரியாசனத்தைச் சகுனிக்குத் துரியோதனன் அளித்தான்' என்று குறிப்பிடுகிறார்.

இதற்குப் பின், வில்லிக்கும், பாரதிக்கும் கதைச் செய்திகளில் பெரிய மாறுபாடுகள் இல்லாவிடினும், சில செயல்கள் முன் நிகழ்ந்தனவாக வில்லியார் கூறுவதனைப் பின் நடைபெற்றனவாகப் பாரதி பேசுகிறான்.

சகுனி உரைத்த சூது போர் உபாயத்தினைத் துரியோதனன் முதலில் விதுரனுக்கு உரைத்ததாகவும், பின்னரே தன் தந்தைக்குக் கூறியதாகவும் வில்லி வரையப் பாரதி, சகுனியைக் கொண்டு முதலில் திருதராட்டிரனுக்கு அறிவித்ததாகவும், பின்னரே விதுரனுக்குத் தெரிவிக்கப் பெற்றதாகவும் எழுதுகிறான்.

இந்த விடத்தில் பாரதி கையாளும் உத்தி, நாடகப் பயனை (dramatic effect) யூட்டுவதாகவுளது. முதலில், துரியோதனன் பால் கேட்ட செய்தியினையே, மீட்டும் திருதராட்டிரன் சொல்ல விதுரன் கேட்டனன் என்று சொல்வதானது, 'ஆறின கஞ்சியைக் குடிப்பது' போலாகும். பாரதி அப்படிச் செய்ய விரும்பவில்லை.

"எதிர்பாராதவொன்று ஒருவனைத் தாக்கும் பொழுது, அவன் எவ்விதம் நடந்து கொள்கின்றானென்பதனைக் கவனித்தால், அவனது இயல்பான குணத்தை அறிய முடியும்." இது உளநூல் கருத்து. அநீதிக்கு அடி பணியாத் தன்மையும், நீதிக்குத் தலை வணங்கும் நீர்மையும், விதுரனுடைய உடன்பிறப்புக்கள். விதுரன் பாலுள்ள மேலான இவ்வியல்புகளின் முழு வளர்ச்சியினையும் வெளியிட்டுக் காட்டவேண்டுமென்பது பாரதியின் விருப்பம். சலனமற்ற ஒரு நீர் நிலையில், ஒரு மலையினைத் தூக்கி யெறிந்தால், அந்நீர் நிலை எப்படிக் கலங்கும்? அதே போன்று, நேர்மை நிறைந்த உள்ளத்தவனாகிய விதுரன் தலைமேல், எதிர்பாராத நிலையில்—ஓர் அணுக்குண்டினை வீசச் செய்து, அதனால் அவன் எவ்வாறு பாதிக்கப் படுகிறான்? அந்நிலையில் அவன் எப்படி நடந்து கொள்கிறான்? என்பவற்றினைக் காட்டுவதன் மூலம், கொடுமையினை எதிர்க்கும் ஒரு சத்திய புருஷனை விளம்பரப்படுத்திக் காட்டப் பாரதி இச் சந்தர்ப்பத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறான். இந்த நாடக உத்தியால், கதைப் போக்கில், ஒரு விறுவிறுப்பும், உரையாடல்களில் சூடும், கேட்போர் மாட்டும் படிப்போரிடமும் சுவையும் ஏறி நிற்கின்றன. இவற்றினை, விரிவாகப் பின்னால் காணலாம்.

சகுனியின் யோசனையின்படி, துரியோதனனே; தன் ஏவலால் ஒரு மண்டபம் சமைக்க உத்தரவிட்டதாகவும் மண்டபம் கட்டப் பெற்ற பின்னரே, அவனும் சகுனியும் திருதராட்டிரனுக்கு அச் செய்தியினையும், அது கட்டப் பெற்றதின் உள்நோக்கத்தினையும் அறிவித்ததாகவும், அவற்றினைக் கேட்டு மகிழ்ந்த திருதராட்டிரன் தன் மகன் செயலுக்குச் 'சபாஷ்' சொன்னதாகவும், வில்லிபுத்தூரார் எழுதுவதனைக் கீழ்க்கண்ட செய்யுள்களால் அறியலாம். துரியோதனன் திருதராட்டிரனிடம்,

''அரும் பெறல் ஐய! கேட்டி! அடியனேன் கருத்து முற்ற,
கரும் புயல் தவழும் சென்னிக் கதிர் மணிக்கூடம் ஒன்று,
பெரும் புகழ் நகரின் ஈண்டுச் சமைத்தனன் பெருமைகாண
வரும்படி தூதொன்றேவு, உண்மைந்தரை விரைவின்
என்றான்.''

(அடியனேன் கருத்து—பாண்டவர்களைச் சூதாடி வெல்ல யான் கொண்டுள்ள எண்ணம்)

துரியோதனன் சொன்னதைக் கேட்ட திருதராட்டிரன்,

''மகன் மொழி நயந்து கேட்டு, வாழ்வுறு தந்தை தானும்
மிக நயந்துருகி, நல்லவிரகினால் வெல்லுற்றீர்''

என்று, சகுனியையும் துரியோதனனையும் பாராட்டுகிறான்.

திருதராட்டிரனது குணவியல்புகளை விளக்கும் வகையில், இங்கு வில்லியாருக்கும், பாரதிக்கும் பெரிய வேறுபாடு காணப்படுகிறது.

திருதராட்டிரனை, வில்லியார் பாண்டவரிடம் நல்லெண்ண மில்லாதவனாகவும், துரியோதனனுடைய சதிகளுக்கு உடந்தையானவனாகவும் காட்டுகிறார். இவை, ''மகன் மொழி நயந்து (விரும்பி) கேட்டு'' என்பதாலும், 'மிக நயந்து உருகி' என்பதாலும், 'நல்ல விரகினால் (தந்திரத்தால்) வெல்லலுற்றீர்' என்பதாலும் புலப்படுகின்றன.

ஆனால் பாரதி, திருதராட்டிரனை ஓரளவு நல்லவனாகவே படைத்துக் காட்டுகிறான். இதனை,

''மிதமிகும் அன்பு அவர்மீது கொண்டானவன்''

''இவர் மீது அவனும் பகை எய்திடச் செய்வோம்''

என்று, துரியோதனன், தன் தந்தை பாண்டவர்களிடம் நல்லெண்ணம் கொண்டுள்ளதனைச் சகுனியிடம் சொன்னதாகப் பாரதி கூறுவதிலிருந்து அறியலாம்.

துரியோதனன், தன் மாமன் சகுனியைத் தன் உள்ளக் காவலனாக (Conscience—Keeper)க் கொண்டவன். துரியோதனனின் பலகீனத்தைச் சகுனி நன்கறிந்தவன். துரியோதனன் தன் உள்ளத்தின் சாவியினைச் சகுனியினிடம் ஒப்படைத்து விட்டான். எனவே தான் இழுத்த வழிக்கெல்லாம், துரியோதனன் வருவானென்பது சகுனிக்கு நன்கு தெரியும். சகுனி, ஒரு சிறந்த உளத்தத்துவமறிந்த நிபுணன். போலி வாதம் புரிவதில் புலி. விற்போரில் தோற்றாலும், சொற்போரில் தோலாதவன். மோதுபோரினும், சூது போரில், தனக்குள்ள ஈடற்ற வல்லமையில் நம்பிக்கை மிகுந்தவன்.

இந்தத் திறமைகளையெல்லாம், இங்குச் சகுனி பயன்படுத்துகிறான். எப்படி? இப்போது பார்க்கலாம்.

தன்னை முழுக்க முழுக்க நம்பிச் சரணடைந்துவிட்ட துரியோதனனைச் சகுனி, திருதராட்டிரனிடம் உடனழைத்து சென்றானேனும், சகுனி, அவனைக் கடைசிக் கட்டம் வரும் வரையில் பேசவிடவில்லை. உணர்ச்சி வசப்பட்டுத் துரியோதனன் ஏதேனும் இடையில் பேசிவிட்டால், காரியம் கெட்டு விடலாமல்லவா? எனவே துரியோதனனுக்கு இந்த இடைக்காலத் தடை.

திருதராட்டிரனிடம் சென்ற சகுனி, நேராகச் செய்தியினைச் சொல்லாமல், மூக்கினைச் சுற்றி வளைத்துப் பிடிப்பது போல், ஒரு பீடிகை போடுகிறான். அப் பீடிகையினை நன்கு அமைத்துக் கொண்டு அதன் மீது ஓர் அற்புதமான பொய்க் கட்டடத்தை எழுப்புகிறான். பிறர் பலகீனங்களை நன்கறிந்தவன் சகுனி. தக்க சமயத்தில், தன் வெற்றிக்குச் சாதகமாக அவற்றைப் பயன்படுத்திக் கொள்வதில் வல்லவன். திருதராட்டிரனுக்கு இயற்கையாக

அமைந்து விட்ட இரண்டு பலகீனங்கள் உண்டு. ஒன்று புறக்கண் இல்லாமை; மற்றொன்று, துரியோதனன்மீது அவன் வைத்துள்ள அதீதமான பாசம். இக் குறைபாடு களைச் சகுனி, இங்கு, நன்கு பயன்படுத்துபவனாய், எடுத்த எடுப்பிலேயே, திருதராட்டிரனிடம்,

''.................... ...ஐய!

ஆண்டகை நின்மகன் செய்தி கேள்!—உடல்
வற்றித் துரும்பொத் திருக்கின்றான்—உயிர்
வாழ்வை முழுதும் வெறுக்கின்றான்.''

''உண்ப சுவையின்றி உண்கிறான்—பின்
உடுப்பது இகழ உடுக்கிறான்—பழ
நண்பர்களோடுற வெய்திடான்—இள
நாரியரைச் சிந்தை செய்திடான்—பிள்ளை
கண்பசலை கொண்டு போயினான்—இதன்
காரணம் யாதென்று கேட்பையால்—''

(நாரியர்—பெண்கள்; பசலை—நிற வேறுபாடு)

என்று சொல்லத் தொடங்கிப் பீடிகையாகிற ஒரு பாராங் கல்லினை அவன் தலைமீது வீசுகிறான்.

இது சகுனியின் நாடகமா? பாரதி கையாளும் நாடக உத்தியா? அது எதுவாயினும், கதைப் போக்கில் ஒரு விறுவிறுப்பு.

மகன் உடல் நலம் கெட்டிருப்பதனைக் கேட்டு, உண்மையாகவே அதிர்ச்சியுற்ற திருதராட்டிரன்,

''தந்தையும் இவ்வுரை கேட்டதால்—உளம்
சாலவும் குன்றி வருந்தியே—என்றன்
மைந்த! நினக்கு வருத்தமேன்?...............
......... ......... ......... .........நினக்கு
எந்த விதத்தும் குறையுண்டோ?''

எனத் துரியோதனனை வினவுகிறான். துரியோதனன் விடையளிக்கு முன், சகுனி, தானே முந்திக் கொண்டு,

"..................நெஞ்சைத்
தின்னும் கொடுந்தழல் கொண்டவர்—சொல்லும்
செய்தி தெளிய உரைப்பரோ!"

"துரியோதனன் உள்ளம் பலவகை வருத்தங்களால் அழுத்தப் பட்டிருத்தலால், அவனால் தெளிவாகப் பேசமுடியாது" என்று சொல்லித் துரியோதனனுக்காகச் சகுனி'வக்காலத்து' வாங்கிக் கொண்டு, திருதராட்டிரன் வினாவுக்குத் தானே விடையளிக்கத் தொடங்கித் துரியோதனன் உடல் மெலிந்து வருவதற்குக் காரணம், அவன் உள்ளத்தைச் சுட்டெரிக்கும் சில தாக்குதல்களே யென்றும், அத்தாக்குதல்கள் இந்திரப் பிரத்த நகரில் நிகழ்ந்த இராசசூய வேள்வியின் போது, வேண்டுமென்றே பாண்டவர்களால் துரியோதனனுக்கு இழைக்கப்பட்டனவென்றும், அவைகளைத் தன் முன்பு துரியோதனன் சொன்னவாறே, தன் கற்பனைகளையும் சேர்த்து, ஒன்றன் பின் ஒன்றாகத் தொடுக்கிறான். தான் திரித்துக் கூறும் உண்மைகளுக்கு மெருகேற்றி, அவற்றில் நியாயம் பொருந்தியிருப்பது போல் திருதராட்டிரனை நம்பச் செய்யும் சகுனியின் சொல்லாற்றல், இங்கு யாரையும், சிறிது மயங்கவைப்பதாயுளது.

துரியோதனன் கொண்டுள்ள வருத்தம், ஓர் அரசனுக் குரிய நியாயமான வருத்தமே என்றும் அந்த நியாயத் தன்மையினை அவன், திருதராட்டினிடமிருந்தே பெற்றுள்ளான் என்றும்,

"நீ பெற்ற புத்திர னேயன்றோ?—மன்னர்
நீதியியல்பு அறிகின்றான்?"

என்று குறிப்பிடும் சகுனி, திருதராட்டிரனை உச்சிகுளிரச் செய்து, துரியோதனன் செய்ய விரும்பும் செயலுக்கு 'அரசியல் அறத்தையும்' நியாயம் காட்டுகிறான்.

"செல்வத் தாபத்தை நெஞ்சில் வளர்த்திடல்
மன்னர் சாத்திரத்தே முதல் சூத்திரம்"

என்று சொல்லும்போது, "துரியோதனன், தன் செல்வச் செழிப்பினைப் பெருக்க நினைப்பது அரச தருமமே யாகும்; அது அர்த்த சாத்திரத்தின் முதற் கட்டளையாக அமைந்துள்ளது" என்ற மேற்கோளைக் காட்டித் துரியோதனன் பாண்டவர்கள் செல்வத்தைப் பற்ற நினைப்பதில் தவறொன்றுமில்லை யென்பதனை மறைமுகமாகச் சுட்டுகிறான். இப்படிப் பல பொய்வாதங்களைச் சைத்தான் வேதம் ஓதுவது போல் அடுக்கிச் சொல்லி வரும் சகுனி முடிவில் வெளிப்படையாக,

"பாண்டவர் செல்வம் விழைகின்றான்—புவிப்
 பாரத்தை வேண்டிக் குழைகின்றான்—மிக
நீண்ட மகிதலம் முற்றிலும்—உங்கள்
 நேமி செலும் புகழ் கேட்கிறான்;—குலம்
பூண்ட பெருமை கெடாதவாறு—எண்ணிப்
 பொங்குகின்றான்; நலம் வேட்கிறான்—மைந்தன்
ஆண்டகைக்கிது தகுமன்றோ—இல்லை
 யாமெனில் வையம் நகுமன்றோ?"

என்று, துரியோதனன் கொண்டுள்ள கருத்து, அரச நீதிக்குத் தக்கதே என்று வாதிட்டு முடிக்கிறான்.

திருதராட்டிரனது புறக்கண் குருடாயிருந்தேனும் இன்னும் அவனுடைய அகக்கண் திறந்துதானிருக்கிறது. அதனால் சகுனியின் பசையற்ற வாதங்களின் பொய்த் தன்மையினையும், துரியோதனனின் தீய எண்ணங்களையும் அவனால் நன்கறிய முடிகிறது. குரங்கினைப் பேய் பிடித்தது போலத் துரியோதனனைத் தன் கைப்பகடை யாக்கிச் சகுனிதான் அவனை அப்படியெல்லாம் ஆட்டி வைக்கிறான் என்பதனை அறிந்துகொண்ட திருதராட்டிரன் வெகுண்டு,

"பிள்ளையை நாசம் புரியவே—ஒரு
 பேயென நீ வந்து தோன்றினாய்—பெரு

வெள்ளத்தைப் புல்லொன்று எதிர்க்குமோ?—இன
வேந்தரை நாம் வெல்ல லாகுமோ?

..................................

நொள்ளைக் கதைகள் கதைக்கிறாய்—பழ
நூலின் பொருளைச் சிதைக்கிறாய்''

என்று திட்டி, சகுனி காட்டிய ஒவ்வொரு குற்றச் சாற்றினுக்கும் தக்க மறுப்பினைக்கூறி நீதி யாதென்பதனை இருவருக்கும் எடுத்துக்காட்டி, நேர்மையான வழியிற் செல்லுமாறு உணர்த்துகிறான். இங்கு நாம் பாரதி படைத்த நேர்மையுள்ள திருதராட்டிரனைப் பார்க்கிறோம்.

இதுகாறும் மௌனியாயிருந்த துரியோதனனால் இனிப் பேசாதிருக்க முடியவில்லை. தன் தந்தையின் மாற்றத்தால் ஏமாற்றமடைந்தவனாய்க் கடுஞ்சினம் கொண்டு திருதராட்டிரனை நோக்கி,

''தாம்பெற்ற மைந்தர்க்குத் தீது செய்திடும்
தந்தையர் பார்மிசை யுண்டு கொல்''

என்று வினவியவனாய்த் தன்னினும் பாண்டவர் மீது அவன் (திருதராட்டிரன்) காட்டும் பரிவு ஒரு தந்தை தன் மகனுக்குச் செய்ய வேண்டிய கடமைக்கு மாறானதென்று சாடி,

''கொல்லினும் வேறெது செய்யினும்—நெஞ்சில்
கொண்ட கருத்தை விடுகிலேன்—அந்தப்
புல்லிய பாண்டவர் மேம்படக்—கண்டு
போற்றி யுயிர்கொண்டு வாழ்கிலேன்''

''வாது நின்னோடு தொடுக்கிலேன்—ஒரு
வார்த்தை மட்டும் சொலக் கேட்பையால்—ஒரு
தீது நமக்கு வராமலே—வெற்றி
சேர்வதற்கோர் வழி யுண்டுகாண், களிச்

சூதுக்கவரை யழைத்தெலாம்—அதில்
தோற்றிடுமாறு புரியலாம்—இதற்
கேதும் தடைகள் சொல்லாமலே—எனது
எண்ணத்தை நீ கொளல் வேண்டுமால்''

என்று வேண்டுகோள் போல் தோன்றும் ஓர் உத்தரவினையே துரியோதனன் தன் தந்தைக்கிடுகிறான்.

ஆசாபாசங்களுக்கும் விருப்பு வெறுப்புகளுக்கும் இடங் கொடாத வரையில் உள்ளம் தூயதாகவேயிருக்கும். திருதராட்டிரனுடைய வுள்ளம் இன்னும் நடுநிலையில் நின்றதால், துரியோதனன் 'சூது' என்று சொன்ன சொல்லைக் கேட்டவுடன் அவன் உள்ளம் துணுக்குறுகிறது.

''ஆசிரியர் செய்வாரோ? இந்த
ஆண்மையிலாச் செயல் எண்ணுவரோ!
பாரினில் பிறருடைமை—வெ∴கும்
பதரினைப் போலொரு பதருண்டோ?''

என்று நயமும் பயமும், மென்மையும் வன்மையும் கலந்த மொழிகளில் பேசித் துரியோதனனைத் தன் கருத்தினை 'மறந்திடுமாறு' பணிக்கிறான்.

முதலையும் மூர்க்கனும் கொண்டது விடுவார்களா? சாதாரண முறையில் கேட்டால் திருதராட்டிரன் உடம்படமாட்டான் என்பதனை இதற்குள் நன்குணர்ந்து கொண்ட துரியோதனன் தன் தந்தையை அச்சுறுத்த வெண்ணி,

''மைய தின்முனர் என்சிரம் கொய்தே
நானிங்கு ஆவி இறுத்திடுவேனால்
செய்ய லாவது செய்குதி''

என்றான். திருதராட்டிரன் நெஞ்சமுடைந்தான்.

துரியோதனனது தந்திரம் பலித்தது. நீதி சரிந்தது. பாசம் வென்றது. விதியின் விளையாட்டுக்காளாகி விட்ட திருதராட்டிரன், ஒரு சராசரி மனிதன் நிலைக்குத் தாழ்கிறான், சந்தர்ப்பம் சூழ்நிலை என்ற சூறாவளியில் சிக்கி,

நீதியறிந்தும் அதனைக் கடைபிடிக்க மாட்டாமல் தம் சுயநலத்துக்காக உலகின் போக்கிலே உழலுகின்றவர்களும், விதியென்னும் பாறையால் தாக்குண்டு மடிகின்றவர்களுமே உலகில் மிகப் பெரும்பாலர். உலகில் எதனையிழப்பதாயிருந்தாலும், எத்தகையவரைப் பிரிவதாயிருந்தாலும் ஏன்? தன்னின் உயிரே போவதாயிருந்தாலும் தம் மனச்சாட்சிப்படி நடக்கும் துணிவுடையோர் மிகமிகச் சிலரே. அவர்களையே உலகம் "மகாத்துமாக்கள்" என்று போற்றி வணங்குகிறது. அவர்கள் விதியினை வென்றவர்கள் போலும்!

மனச்சாட்சிக்கும் பாசத்துக்கும், நடந்த போரில், பாசத்துக்கு வெற்றியைக் கொடுத்துவிட்டு, அன்பு கொண்ட தந்தையாய்த் துரியோதனனைப் பார்த்து,

> "விதி! விதி! விதி! மகனே!
> வேறெது சொல்வேன் அடமகனே!
> கதியுறும் காலனன்றோ—இந்தக்
> கயமகன் என்றினைச் சார்ந்து விட்டான்
> கொதியுறும் உளம் வேண்டாம்—நின்றன்
> கொள்கையின்படி அவர் தமையழைப்பேன்;
> வதியுறுமனை செல்வாய்—என்று
> வழியும் கண்ணீரொடு விடை கொடுத்தான்"

தான் படைத்துள்ள திருதராட்டிரன் ஓரளவு நல்லவனே என்பதனைக் காட்ட பாரதி விதி வென்று விட்டதே என்ற வேதனையால் 'வழியும் கண்ணீரோடு விடைகொடுத்தான்' என்ற தொடரால் குறிப்பிட்டுக் காட்டுகிறான். 'தன் மனம் விரும்பித் திருதராட்டிரன், துரியோதனன் கருத்தினுக்கு உடம்படவில்லை. விதியின் கைப்பாவையானான்' என்பது பாரதியின் மதிப்பீடு.

வில்லியார் கண்டதிருதராட்டிரனை முன்னரே பார்த்து உள்ளோம்.

இனிச் சிந்தித்துப் பயனில்லை. துரியோதனன் கருத்தினுக்கு வடிவம் கொடுத்தாக வேண்டும். அதுதான் தன் மகனுயிரைக் காக்கும். அடுத்த செயல் என்ன?

துரியோதனன் சென்ற பின்னர்த் திருதராட்டிரன் கட்டிட வினைஞர்களை யழைத்து,

''பஞ்சவர் வேள்வியில் கண்டது போல
பாங்கின் உயர்ந்தோர் மண்டபம் செய்வீர்''

எனக் கட்டளை பிறப்பிக்கிறான். விரைவில் அத்தினாபுரத்தில் ஒரு மணி மண்டபம் எழுகிறது. அன்று அங்குக் கொத்தர்கள் எழுப்பிய கல் மண்டபம் இன்றில்லை. ஆனால் பாரதி எழுப்பிய சொல் மண்டபம், இன்றும், தமிழ் மொழியிருக்கும் வரையிலும், வானுறவோங்கித் திகழும். இதுதான் பாரதி எழுப்பிய சொல் மண்டபம்.

''வல்லவன் ஆக்கிய சித்திரம் போலும்
வண்மைக் கவிஞர் கனவினைப் போலும்
நல்ல தொழிலுணர்ந்தார் செயலென்றே
நாடு முழுதும் புகழ்ச்சிகள் கூறக்
கல்லையும் மண்ணையும் பொன்னையும் கொண்டு
காமர் மணிகள் சிலசில சேர்த்துச்
சொல்லை யிசைத்துப் பிறர் செயுமாறே
சுந்தரமா மொரு காப்பியம் செய்தார்''

[காமர்—அழகு, பிறர்—புலவர்கள்]

பாரதிக்கு முன்பு வில்லியார் கட்டி முடித்த மண்டபம்,

''சங்கையில் சிற்ப நுண்நூல் தபதியர் தகவுகூரச்
செங்கையினை அமைத்த கோலச் சித்திரத் தூணம் நாட்டி
அம்கையில் அருண ரத்தத்து, அணிகொள் உத்தரமும் ஏற்றிக்
கங்கையின் உயர்ந்த முத்தின் கற்றையால் முற்றும் வேய்ந்தார்''

[தபதியர்—கம்மாளர், தச்சர். தகவுகூர—அழகு மிக, அருணம்—சிகப்பு, கங்கையில்—கங்கையில் தோன்றிய]

**"ஓவியம் சிறக்கத்தீட்டி, ஒண்கொடி நிரைத்துச்**
**செஞ்சொல்**
**காவிய மக்கட் கெல்லாம் கருந்துறு கருவினிற்றாகி**
**வாவிய புரவித்திண்தேர் மன்னவன் நினைவுக் கேற்ப**
**ஏவிய வினைஞர் தம்மால் இயம்புறச் சமைந்ததன்றே"**

[கொடி—கொடிச்சீலைகள்; வாவிய—தாவும்; வினைஞர்—சிற்பிகள்]

*துரியோதனனே மண்டபம் கட்ட ஏவியதாகவும், அதன் பின்னரே அச்செய்தி திருதராட்ரடினுக்கு அறிவிக்கப் பெற்றதாகவும் வில்லிபுத்தூரார் கூறத் துரியோதனன் விருப்பப்படி திருதராட்டிரன் தன் ஏவலால் மண்டபம் எழுப்பக் கட்டளையிட்டதாகப் பாரதி பேசுகிறான். இவ் வேறுபாடு மீட்டும் இங்கு நினைவுறுத்தப் பெறுகின்றது.*

*மண்டபம் கட்டி முடிக்கப் பெறுகிறது. அடுத்த படியாகப் பாண்டவர்களை யழைக்க வேண்டியதுதானே! யார் சொல்லைப் பாண்டவர்கள் மறுக்காமல் ஏற்பார் களோ அத்தகைய விதுரனை யழைத்து,*

**"..............................**
**தக்க பரிசுகள் கொண்டினிதேகி**
**எம்பியன் மக்கள் இருந்தர சாளும்**
**இந்திர மாநகர் சார்ந்தவர் தம்பால்"**

**"கொம்பினை யொத்த மடப்பிடியோடும்**
**கூடியிங் கெய்தி விருந்து களிக்க**
**நம்பியன் ழைத்தனன், கௌரவக் கோமான்**
**நல்லதோர் நுந்தை" எனவுரை செய்வாய்**

''பேச்சின் இடையில் ''சகுனி சொற் கேட்டே
பேயனும் பிள்ளை கருத்தினிற் கொண்ட
தீச்செயல் இஃதென்று அதையும் குறிப்பால்,
செப்பிடுவாய்..............''

என்று கூறுகிறான். அப்படிக் கூறி வரும் பொழுது, திருதராட்டிரனது மனச்சாட்சி உறுத்துகிறது. எனவே, விதுரனிடம், துரியோதனன் பாண்டவர்களை அழைக்கும் உட்கருத்தினைக் குறிப்பிட்டதுடன், அவ்வுட்கருத்தினைப் பாண்டவர்களிடமும் குறிப்பால் செப்பிடுமாறும் கேட்டுக் கொள்கிறான். திருதராட்டிரனைப் பாரதி, ஓரளவு நல்லவனாகக் காட்டுவது ஈங்கும் நோக்கற்குரியது.

துரியோதனன், சகுனி ஆகிய இருவரது கூட்டுச் சதியினை, முதன் முறையாக திருதராட்டிரன் சொல்லக் கேட்டவுடன், விதுரனுடைய நியாயவுணர்ச்சி பதைபதைக்கிறது. நெஞ்சம் குமுறுகிறது; கொதிக்கிறது முகத்தில். மோதிக் கொள்ளாக் குறையாய், திருதராட்டிரனைப் பார்த்து,

''போச்சுது! போச்சுது பாரதநாடு!
போச்சுது நல்லறம்! போச்சுது வேதம்!
ஆச்சரியக் கொடுங் கோலங்கள் காண்போம்;
ஐய! இதனைத் தடுத்தல் அரிதே?''

என்று கடுஞ்சினத்துடன் தாக்குகிறான். தந்தை, மகன் ஆகிய இருவரது சூழ்ச்சிகளிலும், அறம் வெட்டிச் சாய்க்கப்படுவதனையும், வேதங்கள் எரிக்கப்படுவதனையும் கோபுரங்கள், கோட்டைகள், நகரங்கள் தரைமட்டமாய்ச் செய்யப்படுவதனையும், பாரத நாடு மண்மேடிட்டுப் பேய்கள் நடனமிடும் மயானமாய் மாறுவதனையும், விதுரன் தன் மனக்கண்முன் காண்கிறான். இந்த நிலையினைச் சிந்திக்கவும், அவன் மனச்சாட்சி நடுங்குகிறது. திருதராட்டிரன் மனம் வைத்தால், அந்தச் சமுதாய அழிவினைத் தடுக்க முடியும் என்று நம்புகிறான். அந்த

நம்பிக்கையில், 'இந்தக் கொடுங்கோலங்களைத் தடுப்பாயாக' என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறான்.

ஆங்கில ஆட்சி, தன்னடி வருடிகளுடன் சேர்ந்து கொண்டு, பாரத சமுதாயத்தை யழிக்கச் செய்த சில சூழ்ச்சிகள், பாரதி நினைவுக்கு இங்கு வருகின்றன போலும்! அப்போது அவனுள்ளத்தில் குமுறியெழுந்த கொதிப்பினை, விதுரன் வாயிலாகப் பாரதி வெளியிடுகின்றானென்றே நினைக்கத் தோன்றுகிறது. காரணம், பாண்டவர்களுக்கும் துரியோதனாதியர்கட்கும், உரியதான, "போச்சுது குரு நாடு'' என்று குறிப்பிடாமல், "போச்சுது பாரத நாடு'' என்று இந்தியா முழுவதையும் பாரதி குறிப்பிடுவதேயாகும்.

தான் செல்லும் பாதை தவறானதென்றும், விதுரன் காட்டுவது நியாயமானது என்றும், அப்போதும் திருதராட்டிரன் உணருகிறான். எனினும், அவனால் முன் செய்த முடிவினை மாற்றிக் கொள்ள வியலவில்லை. அவ்வளவு வன்மையாக, விதி, தன்னை விலங்கிட்டு விட்டதனை, விதுரனுக்கு எடுத்துக் காட்டி,

''சென்று வருகுதி, தம்பி! இனிமேல்
சிந்தனை போதும் இதிற்செய மாட்டேன்
வென்று படுத்தனன் வெவ்விதி என்னை
மேலை விளைவுகள் நீ யறியாயோ?
அன்று விதித்ததை இன்று தடுத்தல்
யார்க்கு எளிது''

என்று சொல்லி, 'மெய் சோர்ந்து விழுகிறான்.'

விதுரனுக்கும் திருதராட்டினனுக்கும் இடையே நீதி, அநீதி பற்றிக் காரசாரமான வாக்குவாதங்கள் நடந்ததாக, வில்லியார் முதலிற் குறிப்பிடவில்லை.

''விழியிலா வென்றி வேந்தன்
விதுரனை யழைத்து, நீ போய்
மொழியில், யார் உலகில் மற்றுன்
மொழியினை மறுக்க வல்லார்;
பழியிலா இசை கொள் நீதிப்
பாண்டவர் வந்துன் மைந்தர்
வழியிலாய் ஒழுகும் வண்ணம்
மருட்டி, நீ கொணர்தி''

(மைந்தன் வழியில்—துரியோதனன் காட்டும் வழியில்; மருட்டி—மருளச் செய்து இசைவித்து)

என்றான். பாண்டவர்களை மயங்க வைத்து, அவர்களை அத்தினாபுரத்துக்கு அழைத்து வருமாறு சொல்லி, ''பைம் பொனின் ஓலைமீது பண்புற எழுதி, இன்னே எம்பியும் ஏகுக'' என்றான்; ஏவலின் அவனும் போனான்.

திருதராட்டிரன் பாண்டவர்கட்கு ஓர் ஓலையெழுதிக் கொடுத்தான்; விதுரன் அதனையெடுத்துக் கொண்டு இந்திரப்பிரத்த நகருக்குப் புறப்பட்டான் என்று மட்டுமே வில்லியார் இங்கும் குறித்துள்ளார்.

விதுரன் இந்திரப்பிரத்த நகரினுள் நுழைந்து, அதன் பல்வித அழகுகளையும் அமைப்புக்களையும் கண்டு களித்துக் கொண்டே சென்றான் என்று வில்லியார் எழுத, பாரதி, அத்தினாபுரத்துக்கும் இந்திரப்பிரத்தத்துக்கும் இடையே யுள்ள நாட்டின் வளங்களையெல்லாம் அவன் கண்டு, அத்தகைய பொன்னாட்டின் அழிவுக்குத் தானும் துணை புரிய நேர்ந்து விட்டதை எண்ணி,

''பாரதர் தம் நாட்டிலே நாசம் எய்தப்
பாவியேன் துணை புரியும் பான்மை என்னே!''

என்று உளம் நைந்ததாகப் பேசுகிறான்.

வில்லியாருக்கும் பாரதிக்குமிடையே இங்குக் காட்டப் பெற்ற வேறுபாடு மிகச் சிறுவளவினதேயாயினும், அச்சிறு

வேறுபாட்டின் மூலம், பாரதியின் உள்ளத்தைக் காண முடிகிறது.

ஒரு காலத்தில், ஞானத்தின் பீடமாய், நாகரிகத்தின் பிறப்பிடமாய், செல்வத்தின் உறையுளாய்த் திகழ்ந்த பாரத நாடு, ஆங்கிலேயர் ஆட்சியில் பீடழிந்து பெருமை குன்றிப் போயிற்றே! அந்த அழிவினுக்கு ஆதரவாகச் சில சுயநல வாதிகள், 'அறிவாளிகளாகவிருந்தும் துணை போகின்றனரே' என்று வருந்தும் பாரதியின் ஏக்கத்தை, விதுரன் வாக்கால் இங்குக் காண முடிகிறது. ஒவ்வொரு சமயத்திலும், பாரதி, தன் நாட்டுப் பற்றினை வெளியிடத் தவறுவதில்லை. அவன் பேச்சும், மூச்சும் நாட்டுப்பற்றே!

விதுரன் வரும் செய்தி பாண்டவர்கட்கு அறிவிக்கப் படுகின்றது. அரச மரபினனும், சிறிய தந்தையுமான அவனைப் பாண்டவர்கள், ஏற்ற முறையில் எதிர் சென்று வரவேற்கின்றனர். இங்கு வில்லியாரும், பாரதியும் ஒத்தே ஓதுகின்றனர்.

இரவு வருகின்றது. உணவு முடிகிறது. கூட்டம் கலைந்த பின், விதுரன், "தானும், மைந்தர் ஓர் ஐவரும், ஒரு புடை தனித்திருந்துழி" (வில்லியார்), தான் இந்திரப் பிரத்த நகருக்கு வந்ததன் உள் நோக்கத்தைத் தெளிவாகச் சொல்லிப் பாண்டவர்களின் எதிரொலியை எதிர்பார்த்து நின்றான்" என்கின்றான்.

திருதராட்டிரன், விதுரனிடம் 'ஓலை' கொடுத்தனுப்பியதாகப் பாரதியின் கவிதை குறிப்பிடவில்லை. இந்தச் சிறு வேற்றுமையும் வியக்கத்தக்கது.

விதுரனுக்கும் தருமனுக்குமிடையே நடந்த உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்த பீமன் முதலாகிய நான்கு தம்பியர்களும், விதுரனோ தருமனோ அவர்கள் கருத்தினைக் கேட்பதற்கு முன், தாமாகவே முந்திக் கொண்டு, "சூதாட

அத்தினாபுரம் செல்வதற்கு மாற்றாக, நாற்படைகளுடன் சென்று நூற்றுவரை அழிப்பதே நாம் செய்ய வேண்டிய கருமம்'' என்று கூறியதாக, வில்லிபுத்தூரார் பேசுகிறார். மேலும் அவர், தம்பியர் நால்வரது கருத்தினையறிந்த பின்பும், பெரிய தந்தையின் ஏவற்படி தாங்கள் அத்தினாபுரம் செல்ல வேண்டுமென்று, தருமன் தன் முடிவினை,

' வசையறும் புகழ்த் துணைவரின்று,
உரைத்த வார்த்தை ஆயினும், பெற்ற
அசைவில் அன்புடைத் தந்தை சொல் மறுப்பதோ?''

[துணைவர்—தம்பியர், வார்த்தை—ஏற்கத்தக்க சொல்]

''மேவி ஆளுடை ஐயன் வந்திருக்கவும்,
வேரி வண்டெடுழும் மன்றல்
காவியார் தொடைக் காவலன் ஏவல் நாம்
மறுப்பது கடனன்றே''

[ஐயன்—விதுரன்; வேரி—தேன்; மன்றல்—மணம்; காவலன்—திருதராட்டிரன்]

என்று அறுதியிட்டுப் பேசியதாகவும் தெரிவிக்கிறார்.

ஆனால், பாரதி, விதுரன் வாசகத்தைக் கேட்டவுடன், தருமன், தானாகவே ஒரு முடிவு செய்து விட்டான் என்று எழுதுகிறான். இதனை,

''தந்தையும் வரப் பணித்தான்—சிறு
தந்தையும் தூது வந்ததை உரைத்தான்:
சிந்தை யொன்றினியில்லை—எது
சேரினும் நலமெனத் தெளிந்து விட்டேன்.''

''வெம்பெரு மதயானை—பரி
வியன்தேர் ஆளுடன் இருதினத்தில்
பைம் பொழில் அத்திநகர்—செலும்
பயணத்திற் குரியன புரிந்திடுவாய்
மொய்ம் புடை விறல் வீமா?''

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன.

முன்னவனான தருமன், தன் கருத்தினை வெளியிடு முன், தங்கள் எண்ணங்களைத் திட்டவட்டமாக வெளியிட்டு விட்டால், பின்னால் நிகழக் கூடிய வாக்கு வாதங்களுக்கு இடமளிக்காமலும், அண்ணனோடு தம்பியர்கள் மாறு கொண்டார்கள் என்ற பழிச் சொல்லுக்கு ஆளாகாமலும் தப்பலாம் என்ற நல்லெண்ணத்தில், வீமதியோரை முதலில் வில்லியார் பேச வைத்திருக்கலாம்.

தங்கள் வணக்கத்திற்குரிய மூத்தவனும், அனுபவமும் ஆராய்ச்சியும் உடையவனுமான தருமன் கருத்தினை, முதலில் வெளியிடச் செய்வதே மரியாதைக்குரியது. ஒரு கால், அவன் கருத்துடன் வேறுபாடு கொள்ளும் நிலைவரின், அதனைத் தாழ்மையுடன் வெளியிடுதலே தம்பியர்க்கு நெறியாகும் என்ற கருத்தில், பாரதி, பீமன் முதலியவர்களைப் பின்னால் பேசச் செய்திருக்கலாம்.

ஒவ்வொரு நோக்கில், இரு கவிஞர்களின் அமைப்பு முறை பொருத்தமாகவே தோன்றுகிறது.

மன்னர்கட்குரிய மாண்புடன் அத்தினாபுரிக்குப் புறப் பட வேண்டுவதனைத் தருமன், ''நாளை ஏகுதும் எந்தை வாழ் அத்தினா நகருக்கு, எனத் தருமன் தன் காளை ஏவினான்'' என வில்லியார் சொல்லியுள்ளதனைப் பாரதி சிறிது மாற்றி,

''வெம் பெரு யானை—பறி
வியன்தேர், ஆளுடன் இருதினத்கில்
பைம் பொழில் அத்திநகர்—செலும்
பயணத்திற்குரியன புரிந்திடுவாய்
மொய்ம் புடை விறல் வீமா''

[மொய்ம்பு—வலிமை]

என்று சேனைகளை இரு தினங்களில் புறப்பட ஏற்பாடு செய்யப்பட வேண்டுமென்று, வீமனுக்குக் கட்டளையிட்டதாகக் குறிப்பிடுகிறான். 'படைகளைத் திடீரெனப் புறப்பாடு செய்வது அவ்வளவு எளிதல்ல; அவைகள் எந்த நிலையினை எதிர்க்கவும் தயார் நிலையிற் செல்ல வேண்டும். அதற்கு அவகாசம் தர வேண்டும்' என்ற கருத்தில், பாரதி, இரண்டு தினங்கள் கால அவதி கொடுத்ததாக ஊகம் செய்யலாம்.

படைகள் புடைசூழப் பாண்டவர்களும் பாஞ்சாலியும் அத்தினாபுரம் செல்லப் புறப்பட்டு விட்டனர்.

இவ்விடத்தில் வில்லியார் கூறாதவோர் அரிய கருத்தினைப் பாரதி கூறுகிறான். அந்தக் கூற்றில் பாரதியின் சொல்லமைப்புத் திறம் சுடர் விடுகிறது.

'சில சமயங்களில் நீதிமான்களும், அறநெறியறிந்தோர்களும், உலகினுக்கு வழிகாட்டிகளாக விளங்குபவர்களும் கூடச் சிறியோர் செய்யும் சூழ்ச்சிகளில், தெரிந்தும், சிக்கிக் கொள்கின்றனர். அப்படி அவர்கள் மாட்டிக் கொள்ளுதல், அவர்களது மதியின் பிழையன்று; யாவரையும் ஆட்டிப் படைக்கும் விதியின் பிழையே' என்று, பாரதி, சிறியோனான துரியோதனன் விரித்த வலையில், பெரியோனான தருமன் அகப்பட்டுக் கொண்டதற்கு ஓர் அமைதி காட்ட முற்பட்டு,

''நெடுங்கரத்து விதி காட்டும் நெறியில் நின்றே
நீங்கி அகன்றிடலாகும் தன்மை உண்டோ?'' ('இல்லை.')

என்று முடிக்கிறான்.

அன்றியும், அக வலியும், புறவலியும் மிகுதியாகப் படைத்துள்ள தருமன், புல்லியனான துரியோதனனது சூழ்ச்சியில், அறிந்தும் அகப்பட்டுக் கொண்டதனை,

"நரி வகுத்த வலையினிலே தெரிந்து சிங்கம்
நழுவி விழும்; சிற்றெறும்பால் யானை சாகும்;
வரிவகுத்த உடற்புலியைப் புழுவும் கொல்லும்
வருங்காலம் உணர்வோரும் மயங்கி நிற்பார்;

கிரிவகுத்த ஓடையிலே மிதந்து செல்லும்;
கீழ்மேலாம்; மேல்கீழாம்; கிழக்கு மேற்காம்;
புரிவகுத்த முந்நூலார் புலையர் தம்மைப்
போற்றிடுவார்; விதிவகுத்த போழ்தினன்றே"

என்று,அற்புதமான உவமைகளைக் கொட்டிப் பாடுகிறான்.

உவமையின் கருத்துப் பழமையானதுதான். எனினும், உவமான உவமேயங்களுக்கு அவன் எடுத்துக் காட்டும் பொருள்கள் பாரதியின் புதுமைப் படைப்புக்கள்.

'ஒரு நல்லவன் கெடுகின்றானே' என்று பாரதி அங்கலாய்க்கின்றான். தருமனிடத்தில் அவ்வளவு பரிவு அவனுக்கு!

சிறு புத்தியினையுடைய ஆங்கில ஏகாதிபத்தியத்தின் மாய வலையில் பேரறிவாளர்களாகிய இந்தியர் சிலர் அகப்பட்டுக் கொண்டு தடுமாறுவதனை, இங்குப் பாரதி நினைக்கின்றான் போலும்!

இந்திரப் பிரத்த நகரினின்றும் நால்வகைப் படைகளுடன் புறப்பட்ட பாண்டவர்கள், அத்தினாபுரத்தின் புறத்தே பாசறையில் தங்கி, அடுத்த நாள், தாங்கள் மட்டும் அத்தினாபுர நகரப் பிரவேசம் செய்தனர்என்று வில்லியார்,

''துயில் உணர்ந்து, பைந்தொடையல் மார்பினான
வெயில் எழுந்து தன் விரதம் உற்றபின்
பயில் பெரும் சனம், பாசறைப்படுத்து
எயில் வளைந்த மாநகரி எய்தினான்''

(பைந்தொடையல் மார்பினான் – மாலையணிந்த தருமன்; வெயில் எழுந்து—சூரியன் எழ, பாசறைப்படுத்து—பாசறையில் தங்க விட்டு, எயில்—மதில்)

என்று வரையப் பாரதி, பாண்டவர்கள் படைகளுடன் எங்கும் தங்காமல் நேராகவே நகர்ப்பிரவேசம் செய்தனர் என்பதாக,

''மன்னன் யுதிட்டிரன் தம்பியர், மாதர்கள்
நாலியலாம் படையோடு நகரிடை
நல்ல பவனி எழுந்தனர்''

என்று பாடுகிறான்.

அரண்மனையுட் புகுந்த பாண்டவர்கள், முதல் செயலாகத் திருதராட்டிரனை வணங்கினர். தன்னைப் பணிந்த தன் தம்பியின் மக்களிடம் மிகுந்த பாசம் வைத்துள்ளவன் போலப் பேசி, அவர்களுடைய நலன்களை வுசாவி, (ஆனந்தக் கண்ணீரல்ல) முதலைக் கண்ணீர் விட்டு, திருதராட்டிரன்,

''துண்டியாமல் நும் துணைவர், தம்மொடும்
பண்டு போல மண் பரவ வைகுவீர்''

'நாட்டைப் பிளவு செய்யாமல், துரியோதனாதியர்களுடன், முன்பு போல், உலகோர் புகழ வாழ்வீர்களாக' என்று அறிவுரை கூறி,

''நேயம் உண்டு போல், நெஞ்சொடு இன்னசொல்
தூய மைந்தரைச் சொல்லி''

வீட்டுமனிடம் அனுப்புகிறான் என்று, இங்குக் குறிக்கிறார் வில்லி.

'பாண்டவர்களிடம் அன்புடையவன் போல் நடித்து, உள்ளத்தினிடத்தே வஞ்சனையுடையவனாய்ப் பேசினான்'' என்பது மேற்கண்ட வரியின் பொருள். "நேயம் உண்டு போல்'', "நெஞ்சொடு இன்னசொல்'' என்ற சொற்றொடர்களின் ஆட்சி, சிந்திக்கத்தக்கது. ஆரம்பத்திலிருந்து எப்படித் திருதராட்டிரனை உருவாக்கிக் காட்டி வருகிறாரோ, அப்படியே இங்கும் வில்லியார் அவனைக் காட்டுகிறார்.

"துண்டியாமல் நும் துணைவர் தம்மொடும் வைகுவீர்" என்று, திருதராட்டிரன் பாண்டவர்களுக்கு அறிவுரை கூறுவதில் 'ஒருகால், நீங்கள் உங்கள் பாதிப் பாசத்தைத் துரியோதனாதியர்களிடம் இழக்க நேரிட்டால், அதற்காக அவர்களுடன் சண்டை செய்யாமல், அவர்களிடம் விட்டு விடுங்கள்' என்று பின் நிகழவிருப்பதனை மறைமுகமாகக் குறிப்பிடுகிறானோவென்று, நினைக்கத் தூண்டுகிறது.

பாரதி இவ்விடத்தில்,

> "பொன்னரங் கினிலிருந்தான்—கண்ணில்
> புலவனைப் போய் நின்று போற்றிய பின்
> அன்னவன் ஆசி கொண்டனர்''

[கண்ணில் புலவன்—திருதராட்டிரன்]

என்று மட்டுமே பேசுகிறான். திருதராட்டிரனுக்கு, மாசு கற்பிக்கவில்லை. அது, பாரதி தொடரும் வழியோடு பொருந்தியிருக்கிறது.

அடுத்தபடியாகப் பாண்டவர்கள் பாட்டனாகிய வீட்டுமனிடம் சென்று,

> "வேந்து அழைத்ததும், விதுரன் ஏவலின்
> போந்து அழைத்ததும் புகல வந்ததும்''

[வேந்து—திருதராட்டிரன், புகல வந்ததும்—விதுரன் சொல்லத் தாங்கள் வந்ததும்]

சொல்லி வணங்கி நிற்க, வீடுமன்,

"கள்ள வஞ்சகர் வெங்கருவி செய்யினும்
உள்ளது உண்டு என உண்மை கூறினான்"

[வெம்கருவி செய்யினும்—கொடிய உபாயங்களைச் செய்தாலும், உள்ளது உண்டு—நடக்க வேண்டுவது நடந்தே தீரும்]

'தீய எண்ணமுடைய துரியோதனாதியர் கொடிய உபாயங்களைக் கையாண்டாலும், முடிவில் நீதியே வெல்லும்' என்ற தத்துவத்தை உணர்த்தி, அவர்களை அனுப்பினான் என்று வில்லியார் குறிப்பிட, பாரதி,

"உயர், ஆரிய வீட்டுமன் அடி வணங்கிச் சென்றனர்"

என்று மட்டுமே பேசுகிறான்.

மெய்யுணர்ந்தாரின் உள்ளப் பாங்கினை, சென்றது கருதார்; சேர்வது உன்னார்; நின்றது புசிப்பார், (நின்றது—நிகழ்காலம்) என்று நம் தத்தவ நூல்கள் குறிப்பிடுகின்றன.

"விதியின் செயல்களை யாராலும் தடுக்க
வொண்ணாது; நடப்பது நடந்தே தீரும்"

என்ற உண்மையினை நன்குணர்ந்திருந்த காரணத்தால் 'மெய்ஞ்ஞானியாகிய வீட்டுமன், துரியோதனன் வஞ்சகச் செயலுக்கு இடைவோ எதிர்ப்போ தெரிவிக்காமல், நடுநிலை வகித்தான்' என்று வில்லியார் வெளிப்படையாகப் பேசுகிறார். 'உயர், ஆரிய வீட்டுமனை' என்று வீட்டுமனுக்கு இரண்டு அடைமொழிகள் கொடுத்து அவன் மாண்பினைக் குறிப்பால் உணர்த்துகிறான் பாரதி.

வீட்டுமன் ஆசி பெற்ற பாண்டவர்கள், காந்தாரி, குருமார்கள், துரியோதனாதியோர், நண்பர்கள் ஆகியோரையும் முறையே பணிந்தனர், என்று இரு கவிஞர்களுமே எழுதுகின்றனர். ஆனால், இரவினைக் கழிக்கப் பாண்டவர்கள்,

**'விதுரன் மந்திரம்மன்னினார்'**

(மந்திரம்—வீடு)

என்று வில்லியார் குறிக்கப் பாரதி,

**'அன்பு மூண்டு, உரையாடிப்பின் பிரிந்து விட்டார்'**

என்றவளவே செப்புகிறான். இன்னவிடத்துக்குச் சென்றனர் என்று குறிப்பிடவில்லை.

மறுநாள் பொழுது புலர்கிறது. பாண்டவர்கள், தம் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு, விதுரன் மாளிகையில் இருக்கின்றனர். அங்குத் தன்னைக் காணவந்த முனிவரர் முதலியோருக்குத் தக்கவாறு தானங்கள் வழங்கி விட்டுத் தருமன் வீற்றிருந்த போது, துரியோதனன் தன் பிராதிகாமியினை (தேர்ப்பாகனை) யழைத்து,

"மண்டபத்தின் அழகு காண, மன்னர் ஐவர் தம்மை நீ கொண்டு இமைப்பின் வருக" என அனுப்புகிறான். வந்த பிராதிகாமி, தருமனிடம், துரியோதனன் அழைப்பினை விண்ணப்பம் செய்யத் தருமன், தம்முடனிருந்த,

**"ராய சூய பன்னிதன்னை 'எந்தையில்லில் யாயொடும்**
**போயிருந்து வருக.........."**

[ராய சூய பன்னி—திரௌபதி; எந்தை—திருதராட்டிரன்; யாய்—காந்தாரி]

என்றனுப்பி விட்டு,

**"சீயம் அன்ன துணைவரோடு, சென்றுபுக்கு நன்றியில்**
**யேயிருந்து என இருந்த, பீடிலானை எய்தினான்"**

[சீயம்—சிங்கம்; துணைவர்—தம்பியர், பீடிலான்—துரியோதனன்]

என்று, தருமன், தம்பிமாருடன், துரியோதனன் அமைத்திருந்த புது மண்டபத்துள் புகுந்தனன் என்று வில்லியார் நெடிதாக விவரிக்கிறார்.

பாரதி, கதையினை நீட்டி முழக்காமல்,

"தோள் நலத்து இணையில்லார்—தெய்வம்
துதித்தனர்; செய்ய பொன் பட்டணிந்து
பூண் அணிந்து ஆயுதங்கள்—பல
பூண்டு பொற் சபையிடைப் போந்தனரால்"

என்று, பட்டுக் கத்தரித்தாற்போல், சுருக்கமாகச் சுவைபடச் சொல்லி நிறுத்தினான்.

இங்குப் பண்டைப் புலவர்களின் இயல்பினுக்கும், புதுமைக் கவிஞர்களின் போக்கினுக்கும் இடையே புகுந்துள்ள, கால மாறுபாட்டினால் ஏற்பட்டுள்ள, இலக்கிய நெறியின் மாறுபாட்டினைக் காண முடிகிறது.

புது மண்டபத்தினுட் புகுந்த தருமன், ஆங்கு வீற்றிருந்த வீட்டுமன், திருதராட்டிரன், விதுரன், குருமார்கள், பெரியோர்கள் முதலியோருக்கு வணக்கம் செலுத்திய பின், புதிதாகக் கட்டப்பெற்றுள்ள மண்டபத்தின் மாண்பினை மனமாரப் பாராட்டினான் என்று வில்லியார் எழுதுகிறார்.

பாரதியும், இங்கு வில்லியாருடன் ஓரளவு ஒட்டிச் சென்று, வில்லியார் கூறாத ஒரு புதுச் செய்தியினை வெளியிடுகிறான். அதாவது, சூதாட்டத்தில் இணையற்றவனான சகுனியுடன், அத்தொழிலில் வல்ல விபிம்சதி, சித்திரசேனன், சத்தியவிரதன், புருமித்திரன், ஜயன் என்ற சூதர்களும் சபையில் உடனிருந்தனர் என்பதாகும்.

"புன்தொழில் கவறதனில்—இந்தப்
புவிமிசை யிணையிலை எனப் புகழான்
நன்றறியாச் சகுனி—சபை
நடுவினில் ஏறெனக் களித்திருந்தான்;
வென்றிகொள் பெரும் சூதர்—அந்த
விவிஞ்சதி சித்திர சேனனுடன்
குன்று சத்திய விரதன்—இதழ்
கூர்புருமித்திரன் சயன் என்பார்."

**''சாலவு அஞ்சுதரும்—கெட்ட**
**சதிக்குணத்தார் பல மாயம் வல்லோர்**
**கோலநற் சபைதனிலே—வந்து**
**கொக்கரித்து ஆர்ப்பரித் திருந்தனரால்.''**

*(கவறு—சூதாட்டம்)*

என்பது பாரதி வாக்கு.

தருமனைச் சூதில் வெல்லச் சகுனியொருவனே போதியவனாயிருக்க, இத்தனை பேர்கள் துணை வேண்டுமோவென ஐயம் எழலாம். ஆள்களைக் காட்டித் தருமனை அஞ்சுவிக்கவும், எவ்வாற்றாலும் சூதில் வெற்றி பெறவும், துரியோதனன் செய்த முன்னேற்பாடு இது. பலத்துக்குப் பலம் ஊட்டுவதும் ஒரு போர்த்தந்திரம். சகுனியைச் சூதில் வெற்றி கொள்ள எவராலும் முடியாது என்பதுஉண்மையே. எனினும்.........? 'யானைக்கும் அடிச்சறுக்கல்' ஏற்படலாமல்லவா? ஒருகால், அந்த நிலை ஏற்பட்டால் அதனை ஈடு செய்ய இந்த முன் எச்சரிக்கை! இங்குத் துரியோதனின் நச்சு நெஞ்சத்தை வெளிச்சமிட்டுக் காட்ட, இச் செய்தியினைப் பாரதி இணைத்திருக்கிறான் என்று கருதலாம்.

அவையில் சில நொடி நேரம் அமைதி நிலவுகிறது. 'பாண்டவர்களை அழைப்பித்ததன் நோக்கத்தினைச் செயற்படுத்த எப்படித் தொடங்குவது? யார் தொடங்குவது?' என்ற சிந்தனை போலும்! எல்லாத் தீய செயல்களுக்கும் அடிவேரான துரியோதனனே, அவ்வமைதியினைப் பிளந்து கொண்டு, தருமனை நோக்கி 'மதிய உணவு உண்ணச் செல்லும் வரையில், விளையாட்டில் போதினைக் கழிக்க நீயும் மாமனும் சூதாடலாமே!'

**''மாயம் ஒன்றும் எண்ணலா மனத்தின் மிக்க**
**மாமனும் நீயும், இன்று சூது கொண்டு நிகழ்**
**விலாசம் அயர்விரோ ஆயவென்றி, ஐயனில்லில்,**

**அமுதம் அன்ன போனகம் போய் அருந்தும் அளவும்
இங்கிருந்து போது போகவே''**

[*விலாசம்—விளையாட்டு; இங்கு—இம்மண்டபத்தில்; போனகம்—உணவு*]

*என்று, தன் எண்ணத்தைச் செயலாக்கத் தந்திரமாக யோசனை கூறுகிறான்.*

*சூதாட்டம், என்பது வஞ்சனைக்கு ஒரு பொருளல்லவா? அதுவும் சகுனியிடம் சூதாட்டம், என்றவுடன், எங்குத் தருமன் அஞ்சி மறுத்து விடுவானோவென்ற ஐயத்தில் துரியோதனன், தருமனின் அச்சத்தை நீக்க,*

**''மாயம் ஒன்றும் எண்ணிலா மனத்தின் மிக்க மாமன்''**

*என்று, தீமைகளின் வடிவான சகுனியை நல்ல எண்ணமுடையவனாகக் காட்ட முற்படுகிறான். சகுனியைப்பற்றித் துரியோதனன் வழங்கும் நற்சான்று, யாருக்குத்தான் நகையினை விளைவிக்காது. பட்டப்பகலை இரவென்று சொல்லும் பாதகத்தினைவிடச் சகுனியை நல்லவனென்றும் கூறும் வாக்கு மகாபாதகமானதாகும். சகுனியை அறியாதார் யார்? துரியோதனன் இப்படிச் சொல்லியாவது ஏமாற்றப் பார்க்கிறான்? தருமனை ஏமாற்றப் பார்க்கிறானா? அவையோரை ஏமாற்றப் பார்க்கிறானா? இல்லை! இல்லை!! தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்கிறான்.*

*துரியோதனனின் கருத்தினைக் கேட்ட தருமன், அவனிடம் சூதின் தீமைகளைப் பலபட எடுத்துரைத்து, ''தம்பி! சூதாட்டத்தினால் என்னிடம் நீங்கள் பெற விரும்புவதனைச் சொல்; யானே மனமுவந்து அதனைத் தந்து விடுகிறேன்.''*

**''நெஞ்சில் நீர் ஏது கொண்டது,
அது நுமக்கு அளிப்பன் இம்பர்''**

(*இம்பர்—இப்பொழுதே*)

என்று கூற, உடனிருந்து அவ்வுரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்த சகுனி குறுக்கிட்டுத் தருமனது லோபத்தனத்தைக் குத்திக் காட்டினால், சபையில் தன் மானத்தைக் காத்துக் கொள்ளவேனும், தருமன் சூதாடவுடம் படக் கூடுமென்று நினைத்து,

"வாடுகின்ற மிடியர் போல, வஞ்சம் என்று உரைத்து நீ
ஒடுகின்றது, ஒட்டுகின்ற ஒண்பொருட்கு உலோபியோ?"
(மிடியர்—வறுமையாளர்; ஒட்டுகின்ற — பந்தயத்தில் வைக்கப்படுகின்ற)

என்று கேலி செய்தும்,

"யானெறிந்த தவறு வெல்லின், இசைவு எனக்கு அளித்தி நீ
தானெறிந்த கவறு வெல்லின் அதன் இரட்டித் தருகுவன்"
[எறிந்த—உருட்டிய, கவறு—பக்டை, இசைவு—உடன்பட்ட பந்தயம்]

என்று, தருமன் வென்றால், அவனால் வைக்கப் பெற்ற பந்தயத்தைப் போல் இரண்டு பங்கு தருவதாக ஆசை காட்டியும், தருமனைச் சூதாட்டத்திற்கு இழுக்கப் பார்க்கிறான்.

சகுனியின் பேச்சினைச் சட்டை செய்யாது, தருமன் வாளாவிருத்தலைக் கண்ட கன்னன், இடையிற் புகுந்து, தருமனை விளித்து,

"சூது போரும் அஞ்சியே, தொலைந்து உளம் துளங்குவாய்
மோது போரில் எங்ஙன் உய்தி...?"

என்று, அவன் ஆண்மையினைப் பழிக்கிறான். அப்பொழுதும் தருமன் வாய் திறக்கவில்லை. ஆனால் அருகிலிருந்த கன்னனின் பிறவிப் பகைவனான விஜயன் வெகுண்டு கன்னனின் மேல் வில் எடுக்க, தருமன் அவனைக் கையமர்த்தி, உரோசமிக்கவனாய், துரியோதனனைப் பார்த்து 'சூதில் ஆடல் புரிதும்' என்று சகுனியுடன் சூதாட

முனைகிறான். ஏதோ ஒரு வழியில் விதி வேலை செய்கிறது. பயன், துரியோதனன் எண்ணம் வெற்றிப் பாதையில் முன்னேறுகிறது.

இவ்வளவும், வில்லியார் வரைந்துள்ள சூதாட்டத்தின் முகவுரை.

இனி, சூதாட்டம் எவ்வாறு தொடங்கப் பெறுகின்ற தென்று, பாரதி வரையும் எழுத்துக்களைக் காண்போம்.

சூதர் படையுடன் அவையில் 'ஏறெனக் களித்திருந்த' சகுனி, தருமனை நோக்கி,

"......... ......... அறத்
தோன்றல்! உன் வரவினைக் காத்துளர் காண்
மல்லுறு தடந்தோளர், —இந்த
மன்னவர் அனைவரும் நெடும் பொழுதா;
வில்லுறு போர்த் தொழிலால்—புவி
வென்று தம் குலத்தினை மேம்படுத்தீர்!
வல்லுறு சூதெனும் போர்—தனில்
வலிமைகள் பார்க்குதும் வருதி"

[மல்—மற்போர்; வில்—சூதாடு கருவி]

'தருமா! விற்போர்த் திறமையினால் புவியை வென்ற உனது வில் போர்த் திறமையையும் பார்க்க விரும்புகிறேன்; என்னிடம் காட்டு' என்று, தானே முன் வந்து 'சவால்' விடுகிறான்.

தருமனுக்கும் சகுனிக்குமிடையே சூதின் தீமை, நன்மை களைப் பற்றி முறையே நடந்த உரையாடல்களை, வில்லி யார் போல், பாரதியும் இங்கு விரிவாகவெடுத்துக் காட்டு கிறான்.

அறத் தோன்றலான தருமன் முன், தன் போலி வாதம் எடுபடாமற் போகவே, சகுனி, தருமனை மடக்க ஏச்சு மொழிகள் பேசத் தொடங்கி,

"பாரத மண்டலத்தார்—தங்கள்,
பதி ஒரு பிசுனனென் றறிவேனோ?"

[பதி —அரசன், பிசுனன் —உலோபி]

என்று எள்ளியும்,

"நிச்சயம் நீ வெல்வாய்—வெற்றி
நினக்கு இயல்பான தறியாயோ?"

என்று பசப்பு மொழிகள் பகன்றும், அவை நடுவில் தருமன் நிலையினைச் சங்கடத்துக்குள்ளாக்குகிறான்.

மேலும் வாதப் போரினைத் தொடர விரும்பாத தருமன், ஊழ்வினை வந்து உறுத்த, "மதியினும் விதிதான் பெரிது" என்பதால், மதி மயங்கி,

"மாயச் சூதினுக்கே—ஐயன்
மனம் இணங்கி விட்டான்"

என்று பாரதி, சூதாட்டப் பாயிரத்தைச் சுருக்கமாக முடித்து விடுகிறான்.

சகுனி பேச்சிலும் வல்லவன். பொய்யினையும் மெய்யாக்கிக் காட்டும் ஒப்பற்ற வழக்கறிஞன். அவனுக்குப் பக்கப் பலமாகப் பேசத் துரியோதனன், கன்னன் போன்றவர்களின் துணை வேண்டுவதில்லை என்ற கருத்தில், அவர்கள் பேசியதாகப் பாரதி குறிப்பிடவில்லை போலும்! யாவரையும் விழுங்கி ஏப்பம் விடக் கூடிய அசகாய சூரன் சகுனி என்பது பாரதியின் கணிப்பு.

தருமனை எப்படியாவது சூதில் அகப்படுத்தி, அவனது நாட்டினைப் பற்றிக்கொள்ள வேண்டுமென்பது துரியோதனனது ஒரே குறிக்கோள். இந்த அடிப்படைக் குறிக்கோளினை வில்லியாரும் பாரதியும் நன்கறிந்துள்ளனர். இந்தக் குறிக்கோளினை நிறைவேற்றிக் கொள்ளக்

கையாளப்பட்ட தந்திர உத்திகள்தாம், இரு கவிஞர்கள் வாக்கிலும் வேறுபட்டுள்ளனவென்பது, ஈண்டு நினைக்கற்பாலது.

சூதாடுவதற்குக் குறிக்கப் பெற்றுள்ள இடத்தில் தருமன் வந்தமர்கிறான். அவனுக்குச் சூதாட்டச் சாத்திரத்தின் நுணுக்கங்கள் தெரியாதாகையால், மனம் சுட்டியவோரிடத்தில் வந்து உட்காருகிறான். ஆனால் சூதாட்டக் கலையினை நன்கறிந்திருந்த சகுனி எந்தவிடத்தில் உட்கார்ந்தால் தனக்கு வெற்றி கிட்டுமோ, அந்தவிடத்தில், வெற்றி நல்கும் திசையினை நோக்கி, உட்காருகிறான்.

**''அவிர் பசும் பொன் மீளியாளி, ஆசனத்தி ழிந்து பூம்**
**தவிசில் ஒன்றிடப் புகுந்து, தருமன் வைக, மாமனும்**
**நவிர் அறும் திசைப் புறத்து, நல்நிலம் குறித்து நீள்!**
**புவி பெறும் கருத்தி னோடு இருந்தனன் பொருந்தவே!''**

[மீளி—வீரம், யாளி—சிங்கம், தவிசு—ஆசனம்,
நவிர் அறும்—குற்றமற்ற, நல்நிலம் குறித்து—
வெற்றி தரும் தானத்தை ஆராய்ந்து]

என்று வில்லிபுத்தூரார் எழுதுகிறார். மேலும், இவ்விடத்தில் மற்றுமொரு புதுமைச் செய்தியினையும் அவர் குறிப்பிடுகிறார்.

இக் காலத்தில் சதுரங்கம் ஆடுவதற்கு உபயோகப்படும் சதுரங்கப் பலகை (Chess Board) போல், அக் காலத்தும் தாயக்கட்டை யாட்டத்துக்கும் பலகையும், பலநிறக் காய்களும் இருந்தனவென்பதனை,

**''கவள யானை பணையின், யாளிகால் வகுத்த பலகையில்**
**பவளமான, நீளமான கருவி முன் பரப்பினார்''**

[யானைத் தந்தத்தினால் செய்யப் பெற்றுச் சிங்கக்-
கால்களால் தாங்கப் பெற்ற பலகையும், பவள-
நிறத்தாலுமான காய்களும்]

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன.

வில்லியார் கூறும் இந்நுணுக்கங்களைப் பாரதி பாட வில்லை. தான் சொல்ல விரும்பும் முதன்மையான பொரு ளுக்கு, இச்சிறு செய்திகள் தேவையற்றவை என்ற காரணத் தாலோ, இவை சூதாட்டத்தின் பரபரப்பினைக் குறைத்து விடும் என்ற எண்ணத்தாலோ, பாரதி குறிக்கவில்லை என்று கருதலாம்.

சூதாட்டம் தொடங்குகிறது. காயை உருட்டுமுன், தருமன், பந்தயப் பொருளாகத் தன் கழுத்திலிருந்து முத்தாரத்தை வைத்துச் சகுனியைப் பார்த்து,

''நீயும் மாறு அழைக்க'' (என் பந்தயத்துக்கு எதிராக உன் பந்தயப் பொருளை வைப்பாயாக) என்ன, துரியோ தனன், சகுனிக்காகத் தான் அணிந்திருந்த தோள் வலையத்தைக் கழற்றிப் பந்தயமாக வைக்கிறான். இதனை,

**''..................மாமன் மேல்**
**வாரம் வைத்த நெஞ்சினானும், 'வருக' என்று மாமணிச்**
**சாரம் வைத்த வலையம் ஒன்று, தானும் முன்னர் வைக்கவே''**

(வாரம்—அன்பு; நெஞ்சினான் — துரியோதனன்; வலையம்—தோள் வளையம்)

என்பர் வில்லியார்.

சூதாட்டம் ஆட வருகின்றவர்கள், பணையத்துக்குப் போதுமான பொருள்களோடு வர வேண்டும். போதுமான பொருள்களின்றியோ, பொருள்களே யின்றியோ, சூதாட வருதல், 'வெறும் கையினை முழம் போடுவதற்குச் சமம்.' அது கேலிக் கூத்தாகும். இங்குத் தருமனுக்கு எதிரிலமர்ந்து சூதாடும் சகுனி, பொருள் கொண்டு வரவில்லை. அவனுக் காகத் துரியோதனன் பந்தயம் வைக்கிறான். சூதாடுவது

ஒருவன்; பந்தயம் வைப்பவன் வேறொருவன். இதிலிருந்து விளங்குவது, பந்தயம் வைப்பவனுக்குச் சூதாட்டத்தில் திறமையில்லையென்பதும், எங்ஙனமேனும் எதிரியினைப் பொருளிழக்கச் செய்வதேயென்பதுமேயாம். இந்தக் குறை பாட்டினையும், முறைகேட்டினையும் வில்லியாரின் தருமன் வினவவில்லை. ஆட்டம் முக்கியமேயன்றிப் பந்தயம் யார் வைத்தாலென்ன என்ற பெருமனப்போக்கில் வில்லியாரின் தருமன் கேட்கவில்லை போலும்.

ஆனால், பாரதியின் தருமன், துரியோதனன், சகுனி ஆகிய இருவரது தீய எண்ணத்தினையும், தனக்கெதிராகக் கோடிக்கப் பெற்றுள்ள கூட்டுச் சதியினையும் அம்பலப் படுத்தத் துரியோதனனை நோக்கி,

''ஒருவனாடப் பணயம்—வேறே
ஒருவன் வைப்பதுண்டோ?
தரும மாகுமோடா—தம்பி''

என்று, அவன் செய்யும் தவறினைச் சுட்டிக் காட்டுகிறான். அதற்கெதிராக,

''வருமம் இல்லை ஐயா!—இங்கு
மாமனாடப் பணயம்,
மருகன் வைக்கொணாதோ?—இதில்
வந்த குற்றமேதோ?''
(வருமம்—உட்பகை)

என்று, துரியோதனன், தான் செய்வதில் குற்றமொன்று மில்லையென்று சாதிக்கிறான்.

பிரதிவாதியினிடமே முறையிட்டால், நீதி கிடைக்காது என்பதனை உணர்ந்த தருமன், நீதியினைத் தீர்மானிக்கும் பொறுப்பினைச் சபையோரிடம் ஒப்படைக்க நினைத்து,

''பழுதிருப்ப தெல்லாம்—இங்கே
பார்த்திபர்க் குரைத்தேன்;

முழுது மிங்கிதற்கே—பின்னர்
முடிவு காண்பிர்''

என்று சொல்லிவிட்டு, ஆட்டத்தில் முனைகிறான்.

மின்னல் வேகத்தில் சூதாட்டம் நடைபெறுகிறது.

''சூதாட்டத்தில் வைக்கப்பெற்ற பந்தயப் பொருள்களின் நீண்ட பட்டியலை இரு கவிஞர்களும் வாசகர்களுக்குக் கருத்து விருந்தாக இங்குப் படைக்கிறார்கள். வில்லியாரின் பட்டியலைவிடப் பாரதியின் பட்டியல் சற்று நீண்டதாகவும், சுவைமிக்கதாயும் விளங்குகிறது.

தோல்வி மேல் தோல்வி தருமனைச் சோதிக்க, வெற்றி மேல் வெற்றி, சகுனியைக் கிறங்க வைக்கிறது. தருமன் அடைந்து வரும் தோல்விகளை,

''கண் இழப்பவன் போல்—அவை ஓர்
கணம் இழந்து விட்டான்''

என்றும், சகுனி பெற்று வரும் வெற்றிகளை,

''விழி இமைக்கு முன்னே—மாமன்
வென்று தீர்த்து விட்டான்''

என்றும் பாரதி எழுதுகிறான். 'மந்திரம் போல் சொல் இன்பம் வேண்டுமடா' என்ற பாரதியின் வாக்கு, இங்கு மெய்ப்பட்டிருப்பதனைக் காண முடிகிறது. ஆ! என்ன வேகம்! என்ன சொல்லழகு!!

தன் உடலின் மீதணிந்திருந்த ஆடை, அணிகள் முதல், தன் தம்பியர்கள் அணிந்திருந்த ஆடைகள், அணிகள் வரையில், முதலில் பந்தயம் வைத்து இழந்துவிட்ட தருமன், சூதாட்டப் போதையில், ஆடு மாடுகளையும், அடியாட்களையும் பணையம் வைத்து இழந்துவிட்ட பரிபவத்தினைப் பாரதி,

''மாடிழந்து விட்டான்—தருமன்
மந்தை மந்தையாக,
ஆடிழந்து விட்டான்—தருமன்
ஆள் இழந்து விட்டான்''

என்று பாடுகிறான்.

வெற்றிச் செருக்கில், எவ்வளவு விரைவில் சகுனி சூதாடு கருவியை உருட்டுகிறானோ, அவ்வளவு விரைவில் பாரதியின் சொற்களும் இங்கு உருண்டோடி வருகின்றன. சந்தர்ப்பத்திற்கேற்ற சந்தம்; சந்தத்திற்கேற்ற சொல்லளவு ஆகியவற்றினை இங்குப் படித்து மகிழலாம்.

கண்ணிற்பட்ட பொருள்களையும், கருத்திற்பட்ட பொருள்களையும், தருமன் பந்தயமாக வைத்திழந்து விட்டான். அவன் இழநது விட்ட பொருள்களில், பாண்டவர்கள் நாடு அடங்கவில்லை. அதனைப் பறிக்க வேண்டுமென்பதுதானே சகுனியின் முதன்மையான குறிக்கோள். எனவே, எங்குத் தருமன் சூதாட்டத்தில் வைப்பதற்குப் பொருளில்லாமையால் அவ்வளவில் நிறுத்தி விடுவானோ என்ற ஐயப்பாட்டில், தீய நெஞ்சமுடைய சகுனி தருமனுக்கு நினைவுபடுத்துபவன் போல், விரைந்து, ''இன்னும் உன் நாடு இருக்கின்றதே! அதனைப்புணையமாக வைக்கலாமே''

''பீடிழந்த சகுனி—அங்குப்
பின்னும் சொல்லுகின்றான்;
நாடிழக்க வில்லை—தருமா
நாட்டை வைத்திடென்றான்.''

(பீடு—பெருமை)

என்று பந்தயப் பொருளைச் சுட்டிக் காட்டுகின்றான்.

இவ்விடத்தில், வில்லிபுத்தூரார், நாட்டினைப் பந்தயப் பொருளாக வைக்குமாறு சகுனி தருமனுக்குத் தனியாகச்

சுட்டி யோசனை கூறியதாகக் கூறாமல், போகிற போக்கில், பத்தோடு, பதினொன்று என்பது போல,

''தருமன் பார் கொடுத்தும், அரசு கூர்பதம் கொடுத்தும், உரியதும் ஊர் கொடுத்தும்''

(பார்—நாடு; அரசு பதம்—அரசுரிமை; ஊர்—இந்திரப்பிரத்தம்)

இழந்தான் என்று சாதாரண முறையில் குறிப்பிட்டுச் செல்கிறார்.

ஆனால் பாரதி, இங்கு ஒரு புரட்சிக் கருத்தினைப் புகுத்தி, நீதிமானான விதுரன் வாயிலாகக் கன்லெ்தறிக்கும் ஒரு நீண்ட சொற்பொழிவினையே செய்து விடுகிறான்.

சாதாரண முறையில் வில்லியார் சொல்லிச் சென்ற தற்கும் பாரதி, ஏன் இவ்வளவு முக்கியத்துவம் தர வேண்டும் என்ற வினா, இங்கு எழுகிறது.

வரலாற்றுக் கண்ணோட்டத்துடன் நோக்கினால், இவ்வேற்றுமைக்குக் காரணம் புலப்படும்.

வில்லிபுத்தூரார், இற்றைக்குச் சற்றேறக்குறைய அறுநூறு ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்தவர் என்பது ஆராய்ச்சியாளர்களின் துணிபு. முடியரசு தத்துவம் ஓங்கியிருந்த காலத்தில், வில்லியார் வாழ்ந்தவர். திருவுடை மன்னரைத் திருமாலாகக் கொண்ட கொள்கையில் ஊறியவர். 'நாடு, மன்னனுடைய தனியுடைமை; அதனை அவன் தன் விருப்பப்படி பயன்படுத்தலாம்' என்ற கருத்து நிலவிய காலத்தவர். எனவே, தருமன் தன் நாட்டினைப் பணையமாக வைத்ததில் தவறு காணாமல், அதனை அரசர்கள் செய்யும் சாதாரணச் செயலாக வெண்ணி, மேலெழுந்தவாரியாகக் குறித்துச் சென்றுவிட்டார்.

ஆனால், பாரதி வாழ்ந்த இருபதாவது நூற்றாண்டின் தொடக்கத்திலேயே, குடியரசுக் கொள்கை உலகில் பரவத் தொடங்கி விட்டது. சமத்துவம் (Equality), சகோதரத்வம் (Fraternity), சுதந்திரம் (Liberty) என்ற விடுதலை முழக்கங்கள் எங்கும் எழுந்தன. முதலில் மேனாட்டிலெழுந்த இந்தக் கோஷங்களின் எதிரொலி, பாரத நாட்டிலும் கேட்கத் தொடங்கியது. மேனாடுகளில் ஒவ்வொரு நாடாக முடியரசினை முடித்து விட்டுக் குடியரசினை ஊன்ற லாயிற்று. நாட்டில் 'பொதுவுடைமை' என்ற கருத்து அழுந்தியது. பாரத நாட்டின் விடுதலைக்காக முன்னரே போராடிக் கொண்டிருந்த பாரதத் தலைவர்களுக்கு, இம் முழக்கங்கள் புது உத்வேகத்தினை ஊட்டின.

தமிழ் நாட்டில் ஆங்கில ஏகாதிபத்தியத்தை எதித்தர் விடுதலை வீரர்களுள் ஒருவரான பாரதியையும் மேற் குறித்த புதுக்கருத்துக்கள் தாக்கின. படைக்கலங்களைக் கொண்டு வீரர்கள் செய்யும் போரினைக் கவிஞன், ஒருவனாகவே நின்று தன் எழுதுகோலால் நிகழ்த்திடுவான். 'வாளினை விட எழுதுகோல் வலிமை மிக்கது' என்பது பழமொழி. கவி பாரதியின் பேனாமுள், இங்குக் கருத்துப் புரட்சியினைச் செய்கிறது.

தருமனைச் சகுனி நாட்டினைப் பந்தயமாக வைத்துச் சூதாடும்படி தூண்டினான் என்ற செய்தியினைக் குறிப்பிட வேண்டிய கட்டம், தான் எழுதி வந்த பாஞ்சாலி சபதத்தில் வந்த போது பாரத நாட்டினைப் பிரிட்டிஷ் ஏகாதி பத்தியம் தன் பாட்டன் வீட்டுச் சொத்துப் போல் நினைத்துத் தன் மனம் போனபடி சூறையாடி வருவது பாரதியின் நினைவுக்கு வருகிறது. 'முப்பது கோடி ஜனங் களின் சங்கம் முழுமைக்கும் பொது உடைமை'யை ஒரு தனியினம் தன் விருப்பப்படி அழிக்க என்ன உரிமையுண்டு?" அது எப்படி நியாயமாகும்? என்று வினவத் துடிக்கிறான். இந்த உள்ளத் துடிப்பினை வெளியிடப் பாரதிக்கு இந்தச்

சந்தர்ப்பம் வாய்ப்பளிக்கிறது. குடிமக்களின் உடைமையான நாட்டினைப் பணயம் வைக்கத் தருமனுக்கு உரிமையில்லை யென்பதனை,

"நாட்டு மாந்த ரெல்லாம்—தம்போல்
நரர்கள் என்று கருதார்
ஆட்டுமந்தை யாமென்று—உலகை
அரசர் எண்ணி விட்டார்"

என்று மறைமுகமாகவும், ஏகாதிபத்திய வெறியர்களான துரியோதனன்; சகுனி; இவ்விருவர்களுக்கும் அடிமைப் பட்டுவிட்ட திருதராட்டிரன்; ஆகிய மூவரின் சதிச்செயல் களை வெளிப்படையாகவும் கதாபாத்திரமான விதுரன் வாயிலாகக் கண்டிக்கும் முகத்தால் பாரதி தனியுடைமைத் தத்துவத்தின் பொருந்தாமையைச் சாடுகிறான்.

"நெறியிழந்த பின் வாழ்வதில் இன்பம்
பேரு மென்று நினைத்திடல் வேண்டா"

என்ற நல்லுரையுடன், பாரதி தன் சொற்பொழிவினை விதுரனைக் கொண்டு முற்றுவிக்கிறான்.

மேனோக்காகப் பார்க்கும் பொழுது நாட்டினைப் பந்தயப் பொருளாக வைத்துச்சூதாடுவது அரசர்க்காயினும் அநீதியானது என்று விதுரன் கண்டித்ததாகத் தோன்றும் மேனும் நாடு, ஓர் அரசனின் தனியுடைமையல்லவென்ற கருத்து இடையில் நுண்மையாகத் தொனிப்பதையும் இங்குக் காணலாம்.

அறிவு சான்ற விதுரனின் நல்லுரைகள் துரியோதனன் நெஞ்சில் அனல் துண்டங்களை வீசியது போல் எரிச்சலை யூட்டின. சினம் மீதூறப் பெற்றவனாய் மூத்தோன் என்பதனையும் சிறிய தந்தையென்பதனையும் ஒப்பிலா வில் வீரனென்பதனையும், தான் பேசுமிடம் மன்னர்கள்

அடங்கிய அவ்வை என்பதனையும் மறந்து, மரியாதையற்ற முறையில் விதுரனை "நன்றி கெட்ட விதுரா!" என்று விளித்து,

"தின்ற உப்பினுக்கே—நாசம்
தேடுகின்ற விதுரா!
அன்று தொட்டு நீயும்—எங்கள்
அழிவு நாடுகின்றாய்............"

"ஐவருக்கு நெஞ்சம்—எங்கள்
அரண்மனைக்கு வயிறும்
தெய்வம் அன்றுனக்கே—விதுரா!
செய்து விட்டதேயோ?"

என்று குற்றம் சாற்றித் திட்டி,

"வன்புரைத்தல் வேண்டா—எங்கள்
வலி பொறுத்தல் வேண்டா
இன்பம் எங்குண்டோ—அங்கே
ஏகு..............."

'எனக்கு நீ உபதேசம் செய்ய வேண்டாம், உனக்கு எங்கிருந்தால் மகிழ்ச்சி உண்டாகுமோ, அவ்விடத்துக்குச் செல்' என்று கடுமையாகப் பேசித் தன் வசை புராணத்தை துரியோதனன் முடித்தான் என்கிறான் பாரதி.

இவ்விடத்தில் விதுரனுக்கும் துரியோதனனுக்கும் நடந்த வாக்குவாதத்தை வில்லியார் "பாண்டவர்களை வெல்ல உபாயம் யாதென"த் துரியோதனன் தொடக்கத்தில் கூட்டப் பெற்ற சபையில் வினவியபோது சகுனி, 'சூதாட்டத்தால் வெல்லலாம்' என்று கூறிய கருத்தினை விதுரனுக்குத் துரியோதனன் தெரிவித்த காலத்தில் நிகழ்ந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்.

சகுனியின் தீய கருத்தினையேற்காமல், விதுரன், துரியோதனன் மொழிகளுக்கு மாறுரைத்தபோது துரியோதனன் வெகுண்டு,

''நினக்கு இது தொழிலால் என்றும்
நேயமும் அவர்கள் மேலே''

என்றும்,

''உனக்கும் உன் கிளைக்கும் நாளும் உண்டியும் வாழ்வும் இங்கே,
மனக்கருத்து அங்கே''

என்றான் என்றும் வில்லியார் அங்கு எழுதியுள்ளதனைப் பாரதி இங்கு மெருகிட்டுச்சிறிது விளக்கமாகப் பேசுகிறான்.

சுடுகணைகளை யொத்த துரியோதனனின் கடுஞ் சொற்களைக் கேட்ட விதுரன்,

''சதி வழியைத் தடுத்துவிட்டீர்கள்—சொல்லப் போந்தேன்
சரி; சரி! கேதுரைத்தும் பயனொன்றில்லை
மதிவழியே செல்லுக''

எனக் கூறி ''வாய் மூடித் தலை குனிந்தே'' இருக்கை சேர்ந்தான்.

தருமன், நாட்டினைப் பணயமாக வைத்துச்சூதாட்டத்தில் இழந்தான் என்று வில்லியார் இலேசாகச் சொல்லிச் சென்று விட்டார். ஆனால் பாரதியின் 'பொதுவுடைமைத் தத்துவம்' அச்செய்தியினை அவ்வளவு எளிதாக ஏற்க மறுக்கிறது. எனவே ''ஆயிரங்களான நீதியவை யுணர்ந்த'' தருமன், 'மக்களுக்குரிய நாட்டினை வைத்துச் சூதாடுவது பொருந்துமா?' என்று சிந்திக்கிறான் என்று குறிப்பிட வேண்டுமென்று கருதியவனைப் போலப் பாரதி, 'தருமன் ஓய்வடைந்திருந்தான்' என்று குறிப்பிடுகிறான்.

மேலும், சூதாட முனையாமலிருந்த தருமனைக் கண்ட சகுனி அவனைச் சூதாட்டத்தில் ஊக்கம் கொள்ளச் செய்ய,

''ஓய்வடைந்திடாதே—தருமா?
ஊக்கம் எய்து''

என்று தூண்டி,

"நீ அழித்த தெல்லாம்—பின்னும்
நின்னிடத்து மீளும்"

என்று பேசித் தருமன் உள்ளத்தில், நம்பிக்கையொளியைப் பாய்ச்சுகிறான்.

சுழித்தோடும் ஆற்று வெள்ளத்தில் மூழ்கிக் கொண்டிருக்கும் ஒருவன் தன் கையில் தட்டும் ஒரு சிறு துரும்பினையும் பற்றிக் கரையேறி விடலாம், என்ற பொய் நம்பிக்கையில் முயற்சி செய்வது போலத் தருமனும், சகுனி வார்த்தைகளால் புது நம்பிக்கை பெற்றவனாய்த் தன் நாட்டினைப் பந்தயமாக வைக்க முன்வருகிறான். சூதாடுபவனை அவன் பொருளை யிழக்கயிழக்க 'அடுத்த ஆட்டத்தில் வென்று விடலாம்' 'அடுத்த ஆட்டத்தில் இழந்தவைகளை வென்றுவிடலாம்' என்ற தவறான நம்பிக்கையை அவனுள் உண்டாக்கி இறுதிவரை இழுத்துச் சென்று அவனை 'மொட்டையடித்த' பின்னர்த்தான் சூதாடும் வெறி விடும். இது சூதாட்டங்களின் தனிச்சிறப்பு. இதனைத்தான் 'இழத்தொறும் காதலிக்கும் சூது' என்று திருக்குறள் குறிப்பிடுகிறது.

தருமன், தன் நாட்டினைப் பணயமாக வைத்தாடுகிறான். அதனையும் இழந்தான் என்று சொல்ல வேண்டுவதில்லை. இப்போது, தோல்வி, தருமனின் தலையெழுத்தாகிவிட்டது. மக்களின்உடைமையான நாட்டினைத் தருமன் சூதில் இழந்துவிட்ட முறையற்ற செயலினைப் பாரதியால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. எனினும் நிகழ்ந்துவிட்ட செயலினைச் சொல்லித்தானேயாகவேண்டும்! எனவே பாரதி, தன் ஆற்றாமையினை ஏன்? வெறுப்பினை என்று கூடச் சொல்லலாம்—வெளியிடவும், தருமனின் பொருத்தமற்ற செயலைக் கண்டிக்கவும், அற்புதமான இரண்டு உவமைகளைப் பயன்படுத்துகிறான். தருமனின் நீதிவிரோதச் செயலுக்கு ஓர் உவமை போதாதெனப் பாரதி நினைக்கிறானோ!

''கோயில் பூசை செய்வோர்—சிலையைக்
கொண்டு விற்றல் போலும்,
வாயில் காத்து நிற்போர்—வீட்டை
வைத்திழத்தல் போலும்''

என்பனவே, பாரதி எடுத்தாளும் அந்த இரண்டு உவமைகள்.

கோயிலில் பூசை செய்பவனுக்கும் வீட்டினைக் காவல் புரிவோனுக்கும், பூசை செய்வதற்கும் காவல் புரிவதற்கும் ஈடாகக் கூலி பெறும் தகுதியுண்டேயன்றிக் கோயிலிலுள்ள சிலைகளை விலைக்கு விற்கவும் வீட்டினைச் சூதாட்டத்தில் வைத்திழக்கவும் உரிமையில்லை யென்று உவமைகள் கூறும் முகத்தால், கோயிலுள்ள உயர் நிலையங்களான சிலைகளைப் போன்ற நாட்டிலுள்ள உயிரினங்களைப் பேணவும், வீட்டுக்குச் சமமான நாட்டினைத் தீங்கு வாராமல் காக்கவும் இப்பணிகளுக்காகச் சிறு ஊதியம் பெறவும் தருமனுக்கு உரிமையுண்டேயன்றித் தன் சொந்தப் பொருள் போல அவற்றினை விற்க உரிமையில்லை யென்பதனை அடிக்கோடிட்டுக் காட்டுகிறான் பாரதி.

இன்று கோயிலிலுள்ள சிலைகள் திருடப்பட்டு விற்கப் படுவதும், வெளிநாடுகளுக்குக் கடத்தப் படுவதும் சர்வ சாதாரணமாக நடைபெற்று வரும் செய்தியாகிவிட்டது. ஆனால், பாரதி வாழ்ந்த காலத்தில், அது, கேட்கப்படாத செய்தி எனினும், அறுபதாண்டுகட்கு முன்னரே, பாரதியின் வாக்கில் இச் செய்தி கற்பனையாக இடம் பெற்றுள தெனின், அது, பாரதியின் தீர்க்கதரிசனத்துக்குச் சிறந்ததோர் எடுத்துக் காட்டல்லவா? உண்மைக் கவிஞன் வாக்குப் பொய்க்காது.

தருமனின் முறையற்ற செயலைக் கண்டிக்கும்போது கூடப் பாரதி, மற்றவர்களைக் கண்டிக்கும்போது வழங்கியுள்ள கடுஞ்சொற்களைக் கையாளவில்லை. நாகரிகமான மென் சொற்களால்,

''ஆயிரங்களான—நீதி
யவை யுணர்ந்த தருமன்
தேயம் வைத் திழந்தான்—சிச்சீ!
சிறியர் செய்கை செய்தான்!''

என்று இலேசாக ஏசி விட்டு விடுகிறான். தருமனிடத்தில் அவ்வளவு மதிப்பு பாரதிக்கு!

தருமனின் நாடு இப்போது துரியோதனன் வசமாகி விட்டது. சகுனி, துரியோதனன் ஆகிய இருவோரது, குறிக் கோளும் நிறைவேறிவிட்டது. இனி என்ன?

'தான் இதுவரை பெற்றுள்ள வெற்றி உண்மையில் அரை வெற்றிதான். நாட்டினை மட்டும் வென்று கொண்டு நாட்டினையாண்ட மன்னர்களைச் சுதந்திரமாகத் திரிய விடல், எதிர் காலத்தில் ஒருகால், அவர்களால் நிகழக்கூடிய படையெடுப்புக்கு வழிவகுத்துக் கொடுப்பது போலாகும். 'அடியுண்ட புலி மீண்டும் தாக்கும் சமயத்தை எதிர் நோக்கி நிற்கும்' என்பது பழமொழி. அன்றியும், பாண்ட வர்கள் மீது எப்போதும் பரிவுகாட்டும் குடிமக்களும், அவர் களோடு சேர்ந்து கொண்டு அப்போது புரட்சி செய்தால்? எனவே பாண்டவர்களைத் தம்மிச்சையாக உலவ விடக் கூடாது. பின்னால் நிகழக் கூடிய பெருந் தீங்கினைத் தவிர்க்க வேண்டுமாயின், இப்போதே அவர்களையும் அடிமைப்படுத்தியாக வேண்டும் என்றெல்லாம் துரியோ தனன் சிந்தை கற்பனை செய்கிறது. தன் கற்பனையைச் செயலாக்கத் துரியோதனன்,

''யாவையும் கொடுத்திருப்ப இளைஞரோடு மெய்த்தவக்
கோவையும் குறிக்க
என்று குருகுலேசன் மொழியவே .........''

[கொடுத்திருப்ப—முன்னரே தோற்றியிருக்க;
இளைஞரோடு-தம்பியர்களோடு; மெய்த்தவக்

கோவையும்—தருமனாகிய தன்னையும்,
குறிக்க—பந்தயமாக வைக்கச் சொல்ல; குருகு
லேசன்—துரியோதனன்]

என்று, தன்னையும் தம்பிமார்களையும் பந்தயப் பொருள்களாக வைத்துச் சூதாடும்படி தருமனைத் தூண்டுமாறு சகுனிக்குக் குறிப்புச் செய்கிறான். துரியோதனன் குறிப்பின் வழிச் செல்லும் சகுனியும், தருமனைப் பார்த்து,

**"உன்னையும் குறித்து, வன்பு உரைத்த தம்பிமார் இனம்**
**தன்னையும் குறித்து இசைந்து தருக; வந்து பொருக"**

(உன்னையும் குறித்து—உன்னையும் பந்தயமாக
வைத்து; வன்பு உரைத்த—வீர வாதம் பேசிய;
பொருக-சூது போர் செய்க)

என்றழைக்க, சூதினால் முழுவதும் மயக்குண்ட தருமன்,

**"பின்னையும் குறிப்புறாது பொருது கை பிழைத்தனன்"**

(பின்னையும்—பல இழந்த பின்பும்; குறிப்பு
உறாது ஆலோசியாமல்; பொருதுகைப்
பிழைத்தனன்-சூதாடித் தங்களையும் பந்தயத்
தில் தோற்றனன்.)

இங்ஙனம், தருமன், முதலில் தன்னையும் பின்னர்த் தம்பிமார் நால்வரையும் சூதாடித் தோற்றான் என்ற செய்தியினை, ஓர் எளிய நிகழ்ச்சி போல, மூன்றே வரிகளில் வில்லிப்புத்தூரார் முடித்து விடுகின்றார். தருமனின் மதியீனத்தையும், அதனால் உண்டாகிய அவலத்தையும் அவர் விளக்க விரும்பவில்லை போலும்!

ஆனால், பாரதி, தருமனின் விபரீதச் செயலை மேலெழுந்தவாரியாகச் சொல்லிச் செல்ல விரும்பாமல் தானடைந்துள்ள உணர்ச்சிக் கொந்தளிப்பினை, மற்றவர்களும் பகிர்ந்து கொள்ள வேண்டுமென்று விரும்பி, இங்குப் படிப்படியாக வளர்த்தி நீட்டியே பேசுகிறான். பாரதி,

வில்லியாரின் வேறுபட்டுத் தருமன், முதலில் தன் தம்பியர் களையும், பிறகு தன்னையும் தோற்றதாக, வியாச பாரதத்தைப் பின்பற்றிப் பேசுகிறான்.

துரியோதனன் குறிப்புக் காட்டச் சகுனி தருமனுக்கு யோசனை கூறியதாக வில்லியார் பேச, சகுனி தானாவே முந்திக் கொண்டு, தருமனை மேலும் சூதாட அழைக்கிறான் என்கிறான் பாரதி.

தருமனின் தன்மான உணர்ச்சியினைக் குத்திக் காட்டச் சகுனி,

''தருமா! நீ

''பார்த்திபன் என்பது இனிப் பழங்கதை காண்''

[பார்த்திபன்—அரசன்]

என்று இகழ்ந்து,

''எல்லாம் இழந்த பின்னர்—நின்றன்
இளைஞரும் நீரும் மற்றெதில் பிழைப்பீர்?
பொல்லா விளையாட்டில்—பிச்சை
புகழினை விடுவதை விரும்புகிலோம்,
வல்லார் நினது இளைஞர்—சூதில்
வைத்திடத் தகுந்தவர் பணயமென்றே—வைத்துத்
தோற்றதை மீட்டிடு...............''

என்று, பாண்டவர் இழிநிலைக்கு இரங்குபவனைப் போலவும் அவர்கள் வெற்றிக்கு வழிகாட்டுபவனைப் போலவும் நன்கு நடிக்கிறான்.

சகுனியைத் தொடர்ந்து, துரியோதனனும், தருமனிடம்,

''பரவு நாட்டை யெல்லாம்—எதிரே
பணயமாக வைப்போம்''

''தம்பிமாரை வைத்தே—ஆடித்
தருமன் வென்று விட்டால்,
முன்பு மாமன் வென்ற—பொருளை
முழுதும் மீண்டளிப்போம்''

என்று மயக்கு மொழிகளைப் பேசுகிறான். தருமன் வாய் திறக்கவில்லை. தருமனைச் சும்மா விட்டால் காரியம் கெட்டு விடுமென்று நினைத்த துரியோதனன், தருமன் மறுபடியும் சூதாடி, இழந்தவற்றினை மீட்காவிடில், அவனை (தருமனை) யார், யார் அவமதிப்பார்கள் என்று சுட்டிக் காட்டுபவனாய்,

''அவள் இகழ்ந்திடாளோ? அந்த
ஆயன் பேசுவானோ?''

'தோற்ற உன்னை, உன் மனைவி திரௌபதியும் முகம் நிமிர்ந்து பார்க்க மாட்டாள். உன் உயிர் நண்பனாகிய கண்ணனும், உன் கையாலாகத்தனத்தைஇகழ்ந்துரைப்பான்' என்று, நிகழாதனவெல்லாம் நிகழுமென்று பயம் காட்டு கிறான்.

துரியோதனன் காட்டிய 'பூச்சாண்டி' பலித்துவிட்டது.

வெறி கொண்டெழுந்த தருமன், முதலில், சகாதேவனையும், அவனையடுத்து நகுலனையும் சூதிலிழந்து, சிந்தை கலங்கி, 'என்ன புன்மை செய்தோம்' என்று தன் செயலுக்கு வருந்தி ஊமனாகிறான். தருமனை அமைதி கொள்ள விடுவானா சகுனி?

தருமனைப் பார்த்து, 'உன்னுடன் பிறந்த தம்பியர்களைப் பணயமாக வைத்தாடாமல், உன் சிற்றன்னையின், ஒன்றுமறியாச் சிறு பிள்ளைகளை (அவர்கள் சிறுவர்களாம்) வைத்துச் சூதாடி இழந்தனையே? இச்செயலிலிருந்து உன் நயவஞ்சம் வெளியாகி விட்டது' என்று, தருமனின் பளிங்கினும் தூய நெஞ்சினுக்குக் களங்கம் கற்பிக்கிறான்.

"'திண்ணிய வீமனும் பார்த்தனும்—குந்தி
தேவியின் மக்கள் உனையொத்தே—நின்னில்
கண்ணியம் மிக்கவர் என்றவர்—தமைக்
காட்டுதற்கு அஞ்சினை போலும் நீ''

''வேறொரு தாயில் பிறந்தவர்—வைக்கத்
தக்கவரென்று இந்தச் சிறுவரை—வைத்துத்
தாயத்திலே இழந்திட்டனை''

என்பது, தருமன் மீது சகுனி படிக்கும் குற்றப்பத்திரிகை. தருமனைச் சூதினில் சிக்க வைக்க, இதனைவிடச் சிறந்த போர் உபாயத்தைச் சகுனியையன்றி வேறு யாரால் சிந்தித்துச் சொல்ல முடியும்?

புண்ணியத்தின் வடிவான தருமனால், இந்த அபாண்டத்தைத் தாங்க முடியுமா? அவனுடைய நிழலுக்குக் கூடப் பட்சபாதம் என்பது தெரியாதே? சகுனியின் நச்சுச் சொற்களைப் பொறுக்க மாட்டாதவனாய், 'வெஞ்சின வெள்ளத்தில் மூழ்கி, அக்கரை காண மாட்டாமல், தருமன், முறையே பார்த்தனையும், வீமனையும் முடிவில் தன்னையும் சூதில் வைத்தாடி இழக்கிறான். 'மோசச் சகுனி' அனைத்தையும் வென்று முடிக்கிறான்.

இவ்வளவும் பாரதியின் படப்பிடிப்பு.

இப்போதேனும் துரியோதனனுக்கு வெற்றி கிட்டியதா? இல்லை. வெற்றியின் எல்லையினையெட்ட இன்னும் ஒரு படி ஏறியாக வேண்டும். அதுதான், இன்னும் சுதந்திர முடையவளாக இருக்கும் திரௌபதியினையும் அடிமைப் படுத்துவது. பெண்ணையும் விட்டு வைக்கச் சகுனியின 'கருணையுள்ளம்' உடம்படவில்லை. 'அபலைகள்' என்று வருணிக்கப்படும் பெணகளும், சமயம் வந்தால் பலசாலி களாக மாறக் கூடும். கைகேயி, சாவித்திரி போன்ற பெண்கள் வரலாற்றினையே மாற்றிப் படைத்திருக்கி றார்கள், எனவே, திரௌபதியையும் அடிமை கொண்டாற்

றான் வெற்றி முழுமையாகுமென்றெல்லாம் சகுனியின் எண்ணம் விரிந்தோடுகிறது. தன் உள் நோக்கினை வெளிக் காட்டாமல், சகுனி, தருமனை நோக்கி, அவனுக்கு நலம் உரைப்பவன் போல், 'நீங்கள் அடிமைப்பட்ட பின்னும், நீ வெற்றி பெற ஒரே ஒரு வழியுளது. அதனை முயன்று பார்த்தால், வெற்றித் தேவதை கடைசி நொடியிலேனும் உனக்கு ஆசி வழங்கக் கூடும். உங்கள் மனைவி திரௌபதி இருக்கிறாள்; அவளைப் பணயமாக வைத்தாடி வெற்றி பெறவாம்.'

''மைவரும் தடங்கண் வேள்வி மாது தன்னை ஒட்டிநீ
கைவரும் கவற்றின் இன்னம் எறிக''

(வேள்வி மாது—இராசசூயயாக பதனி திரௌபதி; ஒட்டி—பந்தயமாக வைத்து)

என்று வெகு சாதுரியமாகப் பேசுகிறான். பெண்ணை, மனைவியை வைத்துச் சூதாடும்படியான விபரீத யோசனை, சகுனியின் உள்ளத்திலன்றி, வேறு எவர் உள்ளத்தில் எழும்?

அதுகாறும், வாய் மூடி, ஊமனாக நடக்கும் அக்கிரமச் செயல்களைப் பார்த்துக் கொண்டிருந்த விதுரன், 'திரௌபதியை வைத்துச் சூதாடு' என்று சகுனி, தருமனைத் தூண்டுவதனைப் பார்த்து உளங்கொதித்தெழுகிறான். சகுனியும் துரியோதனனும் கூடிச் செய்யும் அநீதிகளுக் கெல்லாம் உடந்தையாயிருக்கும் திருதராட்டிரனை நோக்கி, 'உன் மைந்தர்கள் செய்யும் தீமைகளை நீ அனுமதிக்கலாமா? நீ பொறி புலன்கள் அற்றவனா? பாண்டவர்களிடத்தில் உனக்கு அன்பில்லையேனும், அறத்தினை பார்வது நீ நோக்க வேண்டாமா? உனக்கு நல்ல காலம் வந்து விட்டது.

"திருகு நெஞ்சின் வஞ்சராகி, இளைஞர்
தீமை செய்தகால் உருகுகின்ற தாதை நீ,
உடன் படுத்திருப்பதோ? மிருகம் அன்று
பறவையன்று, இரக்கமின்றி மேவு வாய்..."

[திருகு நெஞ்சம்-மாறுபட்ட மனம்; உருகுகின்ற—பாண்டவர்களிடம் போலி அன்பு காட்டுகின்ற]

பாண்டவர்களிடத்தில், உனக்கு,

"அன்பு இறந்ததேனும், நீதி அழிய நீ நடத்தினால்,
என் பிறந்து முடியும் மண்ணில்?..."

"..........மற்று இவன்
தரும வஞ்சிதனை இசைந்து பொருதும் என்கை
தருமமோ?
கரும மன்று; உனக்கு நாச காலம் வந்தது"

[இவன்—தருமன்; தரும வஞ்சி—தருமபத்தினியாகிற திரௌபதி. பொருதும்—சூதாடுவோம்; என்கை—என்று சொல்வது]

என்று சாடுகிறான்.

விதுரன் கண்டனங்களுக்கு மறு மாற்றம் கூறாமல், திருதராட்டிரன்,

"விதுரன் நொந்து; நீதி கூற; விழியிலாமை யன்றியே
வெதிரனும் கொல்? என்னுமாறு விழியிலானும்
வைகினான்"

[வெதிரெனும் கொல்—செவிடனோ என்னுமாறு; விழியிலான்—திருதராட்டிரன்]

மௌனம் சாதிக்கிறான்.

விதுரனுக்கும் திருதராட்டிரனுக்குமிடையே இவ்வாறு பேச்சு நடந்து கொண்டிருக்கும் போதே, 'தன்னை மறந்த தருமனும், திரௌபதியைப் பணயமாக வைத்துச் சூதாட,

"'மாயம் உற்ற கவறும், அந்த மாமன் வல்லபத்திலே
தாயம் உற்று, இடம் கொடாது, தருமனைச் சதித்ததே!''

[வல்லபம்—சாமர்த்தியம்; தாயம் உற்று—நல்ல பந்தயம் கிடைக்குமாறு; இடம் கொடாது—தருமனுக்கு உதவி புரியாது]

என்கிறான்.

கடைசிப் பந்தயத்தையும் இழக்கிறான்; 'தருமன், திரௌபதியைத் தோற்றான்' என்று சொல்லவும் வாய் கூசிய வில்லி, ''காய் தருமனைச் சதித்தது'' என்கிறான். ஒன்றே ஒன்றாயிருந்த நம்பிக்கையும் அற்றது. அப்பொழுதும் தருமன், 'அன்னது ஆய போதும், நெஞ்சு அசைந்திலன்' நெஞ்சம் கலங்காது, அமைதியுடனிருக்கிறான்.

இதுகாறும் சொல்லி வந்தவை வில்லியாரின் விளக்கம். இதே செய்தியினைப் பாரதி எங்ஙனம் வெளியிடுகிறானெனப் பார்க்கலாம்.

தம்பிமார்களையும் தன்னையும் சூதாட்டத்தில் இழந்த தருமன், கல்லாய்ச் சமைகிறான். வெற்றிக் களிப்பில் துரியோதனன், துச்சாதனனை விளித்து, ''எங்கும் பறையறைவாயடா—தம்பி!'' என்று சொல்லி, வெற்றிக் கொண்டாட்டத்துக்கு ஏற்பாடு செய்யக் கட்டளையிடுகிறான்.

திரௌபதியினை அடிமைப் படுத்தாமல் வெற்றி விழாக் கொண்டாடச் சொல்லும் துரியோதனனின் மடமைச் செயலை வெளிப்படையாகச் சுட்டிக் காட்டாமல், துரியோதனனை நோக்கி, ''துரியோதனா! அவசரப் படாதே; தருமனுக்கு இன்னும் வெற்றி-வாய்ப்பு இருக்கிறது. இழந்தவற்றை மீட்க முடியும்.''

"மின்னும் அமுதமும் போன்றவள்- இவர்
மேவிடும் தேவியை வைத்திட்டால்—அவள்
துன்னும் அதிட்ட முடையவள்—இவர்
தோற்றது அனைத்தையும் மீட்டலாம்''

'இவர்கள் மனைவியாகிற திரௌபதி இன்னும் சுதந்திரமுடையவளாக இருக்கிறாள். அவள் முகராசி யுடைய மகராசி; அவளைப் பந்தயமாக வைத்தாடினால்,

"பொன்னும், குடிகளும் தேசமும் பெற்றுப்
போற்றுக்கு இடமுண்டு''

என்று, தருமனுக்கு வெற்றி பெறும் உபாயத்தைக் காட்டுபவனைப் போலத் தந்திரமாகப் பேசுகிறான்.'

திரௌபதி, இன்னும் பந்தயப் பொருளாக வைப்பதற்குரிய சுதந்திரப் பொருளாக இருப்பதனைச் சகுனி சுட்டிக் காட்டவுணர்ந்த தருமன், புது ஊக்கம் கொண்டவனாய்த் திரௌபதியைப் பணயம் வைத்தாட முந்துகிறான்.

திரௌபதியினைப் பணயமாக வைக்கத் தருமன் முன் வந்த கொடுமையினைப் பாரதியால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. பாஞ்சாலியின் வடிவத்திலே, இங்குப் பாரதி பாரதத் தாயினையே காண்கிறான். பாஞ்சாலியும் பாரத மாதாவும் சாதாரணப் பெண்களா? தெய்வ மாதர்கள் அல்லவா!

திரௌபதியை, ''மைவரும் தடங்கண் மாது'' என்று வில்லியார் அரைவரியளவில் சொல்லிச் சென்றது போல் கூறாமல், பாரதி, அவளது குண சௌந்தர்யத்திலும், தெய்விகப் படைப்பழகிலும் மூழ்கியவனாய், "பாஞ்சால நாட்டின் தவப் பயன்," ''ஆவியில் இனியவள்,'' ''ஓவியம் நிகர்த்தவள்,'' ''அருளொளி,'' ''கற்பனைக்குயிர்,'' ''எங்குத் தேடினும் கிடைப்பரும் திரவியம்;'' ''தெய்விக

மலர்க் கொடி'', ''கமனியக் காதல்'', ''இன்ப வெள்ளம்'' என்றெல்லாம் நாவினிக்கப் பாராட்டி, இத்தகைய வடிவுறு பேரழகினைச்,

''.........சூதினில் பணய மென்றே
கொடியவர் அவைக் களத்தில்—அறக்
கோமகன் வைத்திடல் குறித்து விட்டான்''

[அறக் கோமகன்—தருமன்]

என்கிறான்.

மற்றப் பொருள்களைப் பந்தயம் வைத்தது போல், பாஞ்சாலியினையும் வைத்துத் தருமன் சூதாடினான் என்று வில்லியார் சாதாரண முறையில் சொன்னது போல், பாரதி சொல்ல விரும்பவில்லை. ஏற்றுக் கொள்ள முடியாத தருமனின் இழிசெயல், பாரதியின் உள்ளத்தினைப் பெரிதும் வாதனைக்குள்ளாக்குகிறது. அந்த வேதனையை எவ்வாறெல்லாமோ சொல்லிச் சொல்லி ஏங்குகிறான். அவ்வேக்கத்தினை,

''வேள்விப் பொருளினையே—புலை நாயின்முன்
மென்றிட வைப்பவர் போல்,
நீள்விட்டப் பொன் மாளிகை—கட்டிப் பேயினை
நேர்ந்து குடியேற்றல் போல்,
ஆள்விற்றுப் பொன் வாங்கியே—செய்த பூணையோர்
ஆந்தைக்குப் பூட்டுதல் போல்...''

'''செருப்புக்குத்'தோல் வேண்டியே—செல்வக்
குழந்தையைக் கொன்றிடல் போல்''

என்று பொருள் பொதிந்த உவமைகளைக் கொட்டி வெளியிட்டு,

'உயிர்த் தேவியைக் கீழ்மக்கட்கு ஆளாக்கினான்''

என்று, திரௌபதியின் பேரிழப்பினை முடிக்கிறான். அடிமையாக்கப்பட்ட திரௌபதி, வேள்விப் பொருளாகிய அவிசு—(தேவர் உணவு) பொன்மணி மண்டபம்; பொன் ஆபரணம்; செல்வக் குழந்தை. அவளை அடிமை கொண்டவன், புலைநாய்; பேய்; ஆந்தை; கொலையாளி!

எப்படிப்பட்ட, அற்புதமான புது உவமைகள்! போகக் கூடாத ஓர் உயர்ந்த பொருள், போகத்தகாத கீழ் இடத்துக்குப் போய் விட்டதே என்று, புலவன் பொருமு கிறான்.

சகுனியின் தந்திரம் வென்றது; துரியோதனனின் எண்ணம் முடிவுற்றது. பாண்டவர் ஆண்டிகளாயினர்.

நீதி தோற்றது; அநீதி மகுடம் சூடியது. விதி சிரித்தது; உலகையாளலாமெனக் கலி மகிழ்ந்தான்; போர் வருமெனத் தேவர் ஆர்த்தார்.

போலி வெற்றி பெற்றுவிட்ட துரியோதனன் கும்பலிடத்தில் வெற்றி முழக்கம்; கொக்கரிப்பு; எக்களிப்பு; ஆர்ப்பாட்டம்; ஆரவாரம்!

இதற்கு மாறாகச் சபையில் அழுகை, கண்ணீர், விம்மல், வெதும்பல், சோகம், சோர்வு!

திரௌபதி, துரியோதனனுக்கு அடிமையாக்கப்பட்ட அவலத்தை, பண்டைப் புலவர்களின் மரபிற்கேற்ப, இங்கு வில்லியார் பல பாக்கள் பாடிப் படிப்போரின் உள்ளத்தில் துக்கச் சுவையினை யேற்றுகிறார். அதுபோன்றே, பாரதியும், அவலச் சுவையினைப் பரிமாறுகிறான். ஆனால் அவன் பெய்யும் அவலச் சுவை அத்தினாபுரத்தை மட்டு மின்றி, மண்ணையும் விண்ணையும் கண்ணீர் வெள்ளத்தில் மூழ்கடித்து, முதல்வர்களான முத்தேவர்களையும், அவர்களின் பத்தினிமார்களையும் திறனழியச் செய்து,

"ஆதிபராசக்தி—அவள் நெஞ்சம் வன்மையுற, சோதிக் கதிர் விடுக்கும் சூரியனும் தெய்வத்தின் முகத்தே இருள் படர" ச் செய்கிறது.

இவ்விடத்தே, பாரதி வாக்கின் மந்திரஜாலங்களை, அவலச் சுவையிலும் நன்கு கண்டு மகிழ முடிகிறது.

வெற்றி பெற்றவன் அறிவாளியாக இருப்பின் வெற்றியில் அடக்கத்தைக் காட்டுவான். பெருக்கத்துப் பணிவைப் பேணுவான்.

"போதம் (அறிவு) இல்லான்," ஆகிய துரியோதனன், அப்பொழுதே, அவ்விடத்தே தன் வெற்றியினைக் கொண்டாட விரைகிறான்.

எப்படிக் கொண்டாட ஆசைப்படுகிறான்?

முதலில் விதுரனை அவமானப்படுத்துவதன் மூலமும், அவனைக் கொண்டு பாண்டவர்களை இழிவு படுத்துவதன் மூலமும் கொண்டாட முனைகிறான். பாண்டவர்களை இழிவுபடுத்துவதை விட, விதுரனை அவமானத்துக் குள்ளாக்குவதே துரியோதனனின் தலையான நோக்கம்.

பாண்டவர்களை, நீதிமான்களென்றும், வீராதி வீரர்களென்றும், துரியோதனாதியோர்களை அயோக்கியர் களென்றும், வலியற்றவர்களென்றும் வெளிப்படையாக முறையே போற்றியும் தூற்றியும் வந்தவன் விதுரனல்லவா! அவனுக்கு, "உன் ஆசை மைந்தர்களின் நீதியும், ஆண்மையும் என் முன் மண்ணைக் கவ்வின, பார்!" என்று குத்திக் காட்டத் துரியோதனன் உள்ளம் துடிக்கிறது. எனவே, அவைக்கண்ணிருந்த விதுரனை விளித்து, 'நாட்டில் வெற்றி விழாக் கொண்டாட ஏற்பாடு செய்! வீமனாதியோரை எனக்கு அடிமைகளாக்கு. பாஞ்சாலியை இந்த அவையோர் காண இழுத்து வரச் சொல்.

"தொல்லை மாநகரும் நாடும் தோரணம் நாட்டச் சொற்றி;
எல்லையில் நிதிகளெல்லாம் இம்பரே எடுக்கச் சொற்றி;
நல்லெழில் மடவார் தம்மை நம்பதி எய்தச் சொற்றி;
சொல்லிய இளைஞர்தாமும் தொண்டினராகச் சொற்றி"

[இம்பர்—இவ்விடமாகிய அத்தினாபுரத்துக்கு; மடவார்—தாதிப் பெண்கள்; சொற்றி—சொல்; தொண்டினராக—அடிமைகளாகுமாறு]

"இவர் தமக்கு உரியளாகி, யாக பத்தினியுமான
துவரிதழ் தவள மூரல் கூரிகுழல் தன்னை, இன்னே
உவர் அலைப் புணரி ஆடை உலகுடை வேந்தர் காணக்
கவர்தரப் புகறி" என்றான், கண்ணருள் சிறிதுமில்லான்"

[யாக பத்தினி—திரௌபதி; துவர் இதழ்—பவளம் போன்ற உதடு; தவள மூரல்—வெண் பற்கள்; புணரி—கடல்; கவர்தர—இழுத்துக் கொண்டு வர; புகறி—சொல்; கண்ணருள்—தாட்சணியம்]

என்று, வெற்றி மிடுக்குடன் கட்டளையிடுகிறான்.

யாருக்கு யார் கட்டளையிடுவது? துரியோதனன் யார்? விதுரன் யார்? யார் செய்ய வேண்டிய வேலையிது?

மகன், தந்தைக்கு ஏவலிடுவதா? ஓர் ஏவலாளன் செய்ய வேண்டிய பணியை விதுரன் செய்வதா? இவற்றினைத் துரியோதனன் அறியானா? அறிந்திருந்தும், ஏன் அப்படிச் செய்ய முனைகிறான்? காரணம், முன்னரே கூறப்பட்டுள்ளது. வெந்த புண்ணில் வேலிட்டு, வேலிடப்பட்டவர்களையும் துன்பத்தில் இன்பம் காண விரும்பும் ஒரு குரூர நெஞ்சத்தின் இழிசெயல் இது.

தான் பெற்ற குற்றமற்ற அருமை மைந்தனுக்குத் தன் கைகளினாலே விலங்கு பூட்டிச் சிறைக்கு அனுப்பி வைக்குமாறு ஒரு தாயினை ஏற்புறுத்தும் கண்ணீர்ச் செயல் இது.

மேற்கண்டவாறு, வில்லிபுத்தூரார் விரிவாகக் குறிப்பிடும் பல செய்திகளையும் பாரதி கூறாமல், தன் வரலாற்றின் கதாநாயகி திரௌபதிக்குத் துரியோதனனால் இழைக்கப்படவிருக்கும் பண்பற்ற செயலை மட்டும் முதன்மையாகக் கருதி, அதனைக் கீழ்க்கண்டவாறு கூறுகிறான்.

**''துரியோதனனும் சுறுக் கெனவே தான் திரும்பி,**
**அரியோன் விதுரன் அவனுக்கு உரை செய்வான்;**
**செல்வாய் விதுரா! நீசிந்தித் திருப்பதேன்**
**வில்வாள் நுதலினாள், மிக்க எழிலுடையாள்,**
**முன்னே பாஞ்சாலர் முடிவேந்தன் ஆவிமகள்,**
**இன்னே நாம் சூதில் எடுத்த விலைமகள்பால்**
**சென்று விளைவெல்லாம் செவ்வனே தானுணர்த்தி**
**'மன்றினிடை யுள்ளான் நின், மைத்துனன் நின் ஓர் தலைவன்**
**நின்னை யழைக்கின்றான் நீள், மனையில் ஏவலுக்கே'**
**என்ன உரைத்து அவளை இங்குக் கொணர்வாய்''**

என்கிறான். மேற்கண்ட சொற்களில் துரியோதனனின் ஆணவத்தை மட்டுமா பாரதி ஒலிக்கச் செய்கிறான்! திரௌபதியினை வாய் கூசாமல், 'விலைமகள்' என்று குறிப்பிடுவதிலிருந்தும், 'அவளை ஏவல் செய்ய அழை' என்று கூறுவதிலிருந்தும், அவனுடைய அநாகரிகப் பண்பினையும், பழிவாங்கும் பாதகத்தினையும் வெளியிடுகிறான். அடுத்து வில்லியார், பின்வருமாறு கூறுகிறார்.

முன்பெல்லாம், துரியோதனனின் தகாத சொற்களைக் கேட்டுக் கொதித்தெழுந்தது போல், விதுரன், இப்போது அவனது பொருத்தமற்ற ஏவலையும், அநாகரிகச் சொற்களையும் கேட்டுப் பொங்கியெழவில்லை. தன் உள்ளத்தின் வேதனைகளையெல்லாம் சிறைப்படுத்திக்கொண்டு, சற்றே அடக்கமான மொழிகளால், அவனுக்கு இடித்துரைக்கின்றான்.

'பிறவற்றையெல்லாம் நீ செய்யினும் செய். ஆனால் திரௌபதிக்குத் தீங்கிழைக்க நினைத்தால் நீ அழிவது திண்ணம். முன்பிறப்பில் நீ செய்த கொடுஞ் செயல்களுக்காக உனக்கொரு சாபம் உண்டு என முக்காலமுணர்ந்தோரால் சொல்லக் கேட்டிருக்கிறேன். இப்பொழுது, அதுமெய்யாகி விடுமோவென்று அஞ்சுகிறேன்.

''விண்ணில் அங்கு அருகித்தோன்றும்
மேதகு வடமீன் அன்றி,
மண்ணில் இங்கு உவமை சொல்ல
மடந்தையர் யாருமில்லாப்
பண்நலம் கடந்த மென் சொல்,
பாவையைப் பழிக்க நீ இன்று
எண்ணின்முன் கேட்ட வார்த்தைக்கு
ஏற்றதுன் எண்ணம், என்றான்''

[மேதகு—மேன்மையுடைய; வடமீன்—அருந்ததி; பண்நலம் கடந்த—இராகத்தின் இனிமையை வென்ற; பாவை—திரௌபதி]

என்று எச்சரிக்கை செய்கிறான். எதிர்காலத்தில் வரக்கூடிய தீங்கினை நினைவூட்டுகிறான்.

விதுரன் புகன்ற நல்லுரைகளோ, முன் பிறப்பில் அவன் பெற்றுள்ளதாகக் குறிப்பிடப்பட்ட சாபத்தினைப் பற்றிய எச்சரிக்கையோ, துரியோதனன் காதுகளில் புகவில்லை. அதற்கு மாற்றாக, விதுரனை நோக்கி,

''என்று அவன் உரைப்பதானும் எறிந்துகை
நகை கொண்டாடி
அன்று அவன் இதயம் வெம்ப,
அவமதி பலவும் கூறி,

நின்றவன் ஒருவன் தன்னை, நீ
நனி விரைவின் ஓடிச்
சென்று அவன் இருந்த கோலத்
தெரிவையைக் கொணர்தி என்றான்.''

[அவன்-விதுரன், ஒருவன்-பிராதிகாமி, திருதராட்டிரன் தேர்ப்பாகன் நனி- மிக, தெரிவை—பாஞ்சாலி]

என்பார் வில்லியார்.

இங்குப் பாரதி காட்டும் விதுரன், பெருசினங் கொண்டவனாகவே' பேசுகிறான். பெண்ணினத்தின் பெருமையினை நிலைநாட்ட வந்த பாரதியால் துரியோதனன் திரெளபதியைப் பற்றிக் கூறும் இழி மொழி களைத் தாங்கிக் கொள்ளக் கூடவில்லை. விதுரனுட் புகுந்து கொண்டு, கன்னத்தில் அறைந்தாற் போல், 'பளார்' 'பளார்' என்று பேசுகிறான். துரியோதனனை,

''மூட மகனே! மொழி யொணா வார்த்தையினைக்
கேடு வரல் அறியாய், கீழ்மையினால் சொல்லி
விட்டாய்''

என்ற 'வாழ்த்துரை' யுடன் தொடங்கித் திரெளபதியின் உயர்வினை,

''தெய்வத் தவத்தினைச் சீர்குலையப் பேசுகிறாய்''

என்று அறிவு கொளுத்துகிறான். வில்லியாரின் 'வடமீன்' (அருந்ததி) பாரதி வாக்கில் 'தெய்வத் தவத்தியாக' வடி வெடுக்கிறாள்.

தம் மனைவிக்குத் தம் கண் முன் தீங்கிழைக்கப்பட்டால் அதனைப் பாண்டவர்கள் கோழைகள் போல் பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்கள். ஒருகால், துரியோதனன் பாண்டவர்களுடன் போரிட்டு வென்று விடலாமென்று நினைத்தால்; அது,

''புள்ளிச் சிறு மான் புலியைப் போய்ப் பாய்வது போல்
பிள்ளைத் தவளை, பெரும் பாம்பை மோதுதல் போல்''

அவனுடைய அழிவில்தான் முடியும்.

''பாண்டவர்தாம் நாளை பழியிதனைத் தீர்த்திடுவார்,
மாண்டு தரை மேல், மகனே கிடப்பாய் நீ''

எனவே,

''ஐவர் சினத்தின் அழலை வளர்க்காதே''

என்று பயமாகவும், நயமாகவும், எச்சரிக்கை செய்கிறான்.

முன் பிறப்பில், துரியோதனன் ஓர் அசுரனாகவிருந்து சாபம் பெற்று, வந்துள்ள பிறப்பில் திருமாலால் கொல்லப் படவிருப்பதை ஒரு புராணக் கதை போல் வில்லியார் குறிப் பிட்டுள்ளதனைப் பாரதி குறிப்பிடவில்லை. அதற்கு மாற்றாக நல்லவர்கள் உள்ளத்தை நலியச் செய்த வேனன் என்பான் அழிந்த வரலாற்றினைக் குறிப்பிட்டு,

''நல்லார் தமதுள்ளம் நையச் செயல் செய்தான்
பொல்லாத வேனன், புழுவைப் போல் மாய்ந்திட்டான்''

என்று வேறு ஓர் உதாரணத்தால், துரியோதனனைத் தெருட்டி, முடிவுரையாக,

''நின்னுடைய நன்மைக்கிந்நீதியெலாம் சொல்லுகிறேன்
என்னுடைய சொல்,வேறு எவர்பொருட்டும் இல்லையடா,
பாண்டவர்தம் பாதம் பணிந்தவர்பால் கொண்டதெலாம்
மீண்டு, அவர்க்கே ஈந்துவிட்டு, விநயமுடன்
மற்றவரைத் தங்கள் வளநகர்க்கே செல்லவிடீர்
குற்றம் தவிர்க்கும் நெறியினைக் கொள்ளீரேல்
மாபாரதப் போர் வரும் நீர் அழிந்திடுவீர்''

என்று, துரியோதனன் மூடச் செயலால் வரவிருக்கும் பேராபத்தினையும், அதனைத் தவிர்த்தற்குரிய வழியினை

யும் கல்லும் புல்லும் கனிந்துருகப் பேசுகிறான். விதுரனாக இங்குப் பேசும் பாரதியின் நீண்ட சொற்பொழிவில், ஹோமரின் வீர நடையினையும், பைரனின் ஆவேசத்தையும், கம்பனின் கற்பனை வளத்தையும், வள்ளுவனின் சொற்கட்டையும் ஒருங்கே ரசிக்க முடிகிறது.

இங்கு, வில்லியாரும் பாரதியும் ஒரு கருத்தினையே வெளியிட்டாலும், இருவரும் அக் கருத்தினை வெளியிடும் பாங்கில் பழமைக்கும் புதுமைக்குமுள்ள புனைவு வேறு பாட்டினை நன்கு காண முடிகிறது. வில்லியார் வாக்கு, முன்னைப் புலவர்களின் நடையோடொத்து, அருஞ் சொற்களும் நீண்ட அடை மொழிகளுங் கொண்ட இயற்றமிழாய் மணக்க, பாரதியின் பேச்சு, எளிய இனிய உணர்ச்சித் துண்டங்களாய், நாடகத் தமிழில் நர்த்தனமாடுகிறது. சமமான தரையில், ஆரவாரமின்றி, ஆழ்ந்து, ஆற்றொழுக்காய்ச்செல்கிறது வில்லியார் கவி. முத்தையும், பவளத்தையும், ரத்தினத்தையும் வாரியிரைத்துக் கொண்டு துள்ளிக் குதித்தும் பேரிரைச்சலுடன் வரும் மலை வீழருவியாக ஓடிவருகிறது பாரதி கவிதை!

விதுரன், துரியோதனனுக்குத் தெருட்டியும், மருட்டியும் கூறிய வுரைகளெல்லாம், 'புல்லர்க்கு நல்லோர் சொன்ன பெருளென'ப் பயனற்றுப் போயின. துரியோதனன், விதுரனின் நன் சொற்களைப் புறக்கணித்ததோடு நிற்காமல், மேலே ஒரு படி சென்று, விதுரனை,

> ''சீச்சி மடையா கெடுக நீ,
> இப்போதுன் சொல்லை எவரும் செவிக்கொள்ளார்''

என்று, 'மடையா' என்ற பட்டத்தால் சிற்றப்பனைத் திட்டி விட்டு, ஆங்கிருந்தவொரு தேர்ப்பாகனை விளித்து,

யாரடா தேர்ப்பாகன்! நீ போய்க் கணம் இரண்டில் 'பாரதர்க்கு வேந்தன் பணித்தான் எனக் கூறிப் பாண்டவர்

தம் தேவிதனைப் பார்வேந்தர் மன்றிலே ஈண்டழைத்து வா' என்று இயம்புகிறான்.

இங்குக் கதையை நடத்திச் செல்லும் போக்கில் வில்லிப்புத்தூராருக்கும் பாரதிக்கும் வேறுபாடு காணப் படுகின்றது.

திரௌபதியைச் சபைக்கு அழைத்து வருமாறு துரியோதனனால் ஏவப்பெற்ற பிராதிகாமி, திரௌபதியிடம் சொல்லாமல், தானாகவே சில செய்திகளைப் படைத்துத் துரியோதனனிடம் சொல்லிச் சென்று விட்டதாக, வில்லியார் மூன்றே பாக்களில், பொருளை முடித்து விடுகிறார். பாரதியின் தேர்ப்பாகனோ, ஒரு முறைக்கு இருமுறை திரௌபதியிடம் சென்று விளக்கமாகப் பேசுகிறான். திரௌபதியே வினாவினைத் தொடுக்கிறாள். இங்குத் திரௌபதி, துரியோதனன், தேர்ப்பாகன் ஆகிய மூவருடைய உரையாடல்களும், பாரதி படைப்பில் நீட்டமாகவே வுள.

இரு கவிஞர்களின் சித்திரங்களையும், அவர்களின் வாய்மொழிகளாலேயே இங்குப் பார்க்கலாம்.

வில்லியாரின் பிராதிகாமி, திருதராட்டிரனுடனிருந்து நீண்ட காலம் அரசுப் பணிபுரிந்து, அனுபவம் பெற்றவன். அரச நெறி முறைகளையறிந்தவன். தக்கன தகாதன உணர்ந்தவன். எனவே, துரியோதனனது ஏவலிற் பொதிந்துள்ள அநீதியினை நினைத்துப் பார்க்கிறான். அந்த அநீதிக் கட்டளையைத் தன் வாயாற் சொல்ல அஞ்சுகிறான். கட்டளையினைத் திரௌபதியிடம்வெளியிட்டால், அந்தக் கற்புத் தெய்வத்தின் உள்ளம் எப்படியெல்லாம் துடிக்குமென்று கற்பனை செய்து பார்க்கிறான். அந்த மாதரசிக்கேற்படக் கூடிய மனத்துயரினைத் தன் கண்களால் காணும் பெரும் பாவத்தைவிடப் பொய் சொல்லும் பாவத்தையும், அரச கட்டளையினை மீறிய

குற்றத்தையும், ஏற்கத் துணிகிறான். அவன் துணிவு, ஒரு ஞானியின் துணிவு; உயர்ந்த நீதியின் துணிவு. துரியோதன னுடைய செயலில், மறைந்துள்ள நீதியின்மையினைத் தானே தன் நுண்ணறிவாலுணர்ந்து, அதனைத் திரௌபதியிடம் சொல்லாமல், தானே சொல்லி விடுகிறான்.

"பெருந்தகை ஏவலோடும் பிராதிகாமியும் அங்குஏகி,
வருந்திய மனத்தன் ஆகி மாசறு மரபின் வல்லி
இருந்துழி எய்துறாமல் இடைவழி நின்றும் மீள
விரைந்தனன் ஓடி வந்து வேந்தனுக்கு ஏற்பச்
சொன்னான்"

[பெருந்தகை—துரியோதனன்; வல்லி—திரௌபதி; இருந்துழி—இருந்தவிடம்; எய்துறாமல்—சொல்லாமல்]

"என்னைத் தோற்று, மனுநெறி கூர், இசையேன்
தன்னைத் தோற்றனனோ?
தன்னைத் தோற்று, தனது மனத்தளர்வால்
என்னைத் தோற்றனனோ?
முன்னைத் தோற்ற தோற்ற பொருள்
முற்றும் கவரும் முறையன்றிப்
பின்னைத் தோற்ற பொருள் கவரப் பெறுமோ
நினைக்கப் பெறாதுஎன்றாள்"

[என்னைத் தோற்று—முன்னே என்னைத் தோற்று இழந்தானா? மனுநெறி கூர் இசையோன்—தருமன். நினைக்கப் பெறாது—நினைக்கத் தக்கதன்று]

மேற்கண்ட இரு செய்யுட்களிலும், வில்லியார் பிராதிகாமியின் செயலினையும், அவன் படைத்துச் சொன்ன தடையினையும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார்.

தருமனின் உரிமை எதனுடன் முடிகிறது? துரியோதனன் எவ்வெப் பொருள்கள் மீது உரிமை கொண்டாடலாம், என்ற நுணுக்கங்களைத் தர்க்கரீதியாக ஆராயுமாறு ஆசிரியர் நம்மைத் தூண்டுகிறார். இது, வில்லியாரின அறிவுக் கூர்மைக்கொரு சான்று.

திரௌபதி வினவியதாகப் பிராதிகாமி தானே படைத்துத் துரியோதனனைக் கேட்ட வினா எளிதாகவும், பொருள் விளங்குவதாகவும் உளது. ஆனால், அவ்வினாவில, அடங்கியுள்ள சட்ட நுணுக்கம் வழக்கறிஞர்களுக்கும் வியப்பூட்டுவதாகும்.

மேதாவியான சகுனிக்கும் துரியோதனனுக்கும் இச் சட்ட நுணுக்கம் அவசரத்தில் தெரியாமல் போயிற்று. தெரிந்திருந்தால், தருமன் தன்னைப் பணயமாக வைத்தாட யோசனை கூறியிருப்பார்கள். இருவரும் இங்குக் கோட்டை விட்டு விட்டார்கள். அவர்கள் இந்தச் சிக்கலை எதிர் பார்க்கவில்லையென்றே தோன்றுகிறது. ஓர் அடிமைக்கு, மற்றொருவரை அடிமையாக்க உரிமை யேது? தான் அடிமைப்பட்ட அக்கணத்திலேயே, முன்னர்த் தனக்குரிமையுடையவாயிருந்த பொருள்கள் மீதும் அவனுக்குள்ள உரிமை இயல்பாகவே நீங்கி விடுகிறது. அடிமையான பின்னர் அவற்றினை விற்க வாங்க அவனால் முடியாது.

அடிமைப்பட்டு விட்டவன், வடிவில் மனிதனாயிருப்பினும், சிந்தனையில், செயலில், வாயற்ற விலங்குக்கு நிகரானவனே. இது, அக்கால அடிமையின் இலக்கணம்.

இந்த நுணுக்கத்தினைப் பிராதிகாமியின் வாயிலாக வெளியிட்டுத துரியோதனனின் விபரீதச் செயலுக்கு முட்டுக்கட்டை போட், வில்லியார், "தருமர், முதலில் என்னைச் சூதாட்டத்தில் தோற்றாரா? தம்மைத் தோற்றபின் என்னைத் தோற்றாரா? தமக்குப் பின்னால் என்னை

வைத்தாடித் தோற்றிருந்தால், அந்தத் தோல்வி செல்லத் தக்கதல்ல. தருமர், தம்மைத் தோற்குமுன் இழந்த பொருள்கள் மீதே துரியோதனனுக்கு உரிமையுண்டு'' என்ற வாதப்பிரச்சினையினைத் திரெளபதி கிளப்பியதாக வெளியிடுகிறார்.

எவருடைய கருத்துக்கும், எந்த நீதிக்கும் மதிப்புத் தந்து கட்டுப்படாத துரியோதனன், அந்த வினாவுக்கு விடை கூறாமல், சீற்றமுற்று, 'செல்வப் பாவை திருவுள்ளம்' இது, என்றந்தத் தேர்ப்பாகன் சொல்லப் பாவி தரியாமல், துச்சாதனனை முகம் நோக்கி,

''அல்லல் பான்மை பெற்று அழிந்த
ஐவர்க்கு ஒருத்தியாய் அம்
மல்லல் பானல் விழியாளை
மன் பேரவையில் அழை''

(செல்வப் பாவை — சிறப்புப் பொருந்திய திரெளபதி; அல்லல் பான்மை பெற்று— துன்பப்படும் விதியடைந்து; மல்லல் பானல்— வளப்பமுடைய கருங்குவளை)

என்று, தம்பி துச்சாதனனுக்கு ஏவவிடுகிறான். நீதிக்குத் தலை வணங்காத, ஒரு பெண்ணுக்குத் தீங்கிழைக்கத் துணிந்து விட்ட மன்னனாகிய துரியோதனனுக்குப் 'பாவி' என்ற அடைமொழியை ஆசிரியர் கொடுத்திருப்பது, சாலப் பொருள் பொதிந்தது.

பாரதியின் தேர்ப்பாகனும் மனிதவுள்ளம் படைத்தவன். நீதி நெறிமுறைகள் உணர்ந்தவன். வில்லியாரின் பிராதி காமியைப் போல், கடமையினும் உயர்நீதிக்கு முதன்மை யிடம் தாரா விடினும், சாதாரண நீதியாகிற கடமையை மதிக்கிறவன்; 'எப்படியும் நீதி முடிவில் வெல்லும், அரசன் ஏவியதனைச் செய்தல், அவன் உப்பினைத் தின்னும்

எனக்குக் கடமை. கடமையாற்றுவதற்கும், என் மனச் சாட்சிக்கும் முரண் ஏற்படாத எல்லை வரையில், என் பணி யினைச் செய்வேன்' என்ற துணிவு கொண்டு, திரௌபதி யிடம் சென்று, சோகம் ததும்பத் துடித்த குரலில், அவளைத் தெய்வமாகவே நினைத்து, ''அம்மனே! போற்றி! அறங் காப்பாய் தாள் போற்றி!'' என்று, அவள் அடி வணங்கி,

''சொல்லவும் நாவு துணியவில்லை; தோற்றிட்டார்,
எல்லாரும் கூடியிருக்கும் சபைதனிலே,
நின்னை யழைத்துவர நேமித்தான் எம்மரசன்''

என்று, பணிவும் பரிவும் சேர, நிகழ்ந்தனவற்றையெல்லாம் சொல்லி, விண்ணப்பம் செய்து நிற்கிறான்.

தேர்ப்பாகனின் சொற்களைக் கேட்ட திரௌபதி கொதித்தெழுகிறாள். அவனை நோக்கி,

''..............யார் சொன்ன வார்த்தையடா!
சூதர் சபைதனிலே தொல்சீர் மறக்குலத்து
மாதர் வருதல் மரபோடா?
யார் பணியால் என்னை அழைக்கின்றாய்?''

என்று சூடாக வினவுகிறாள்.

பெண், வினாக் குறியாக்கப்படும் பொழுதும், அவளது தன்மானவுணர்ச்சிக்கு இழுக்குக் கற்பிக்க முயற்சி செய்யப் படும் பொழுதும், பாரதியின் குரல், பெண்கள் சார்பில் வீறு கொண்டெழும். திரௌபதிக்குத் துரியோதனன் இழைக்க நினைக்கும் அவமானத்தைப் பாரதியால் அனுமதிக்க முடியவில்லை. 'குலமாதர்களை விலைமாதர்கள் போல் நினைத்து, ஒழுக்கங் கெட்ட சூதாடிகள் நிறைந்த அவைக்கு அழைக்க, யாருக்கும் உரிமையில்லை. ஒருக்கால், எவரேனும், மானமின்றி நாணமின்றி அழைத்தாலும், கற்பினுக்கு அணிகலமான வீரமாதர்கள் அந்த ஏவலுக்குப் பணிய மாட்டார்கள்' என்ற தன் உட்கோளினைப் பாஞ்சாலி வாக்காக வெளிப்படுத்துகிறான் பாரதி.

''யார் பணியால் என்னை யழைக்கின்றாய்?''

என்று வினவிய திரௌபதிக்கு, முதலில் ''நேமித்தான் எம்மரசன்'' என்று பொது வகையால் பதில் சொன்ன தேர்ப்பாகன், இப்போது ஐயத்துக்கிடமின்றி, 'மன்னன் சுயோதனன் பணியினால்' என்று நேர்முகமாக விடையளிக்கிறான்.

தன்னை அழைப்பவன் மன்னனும், தன் மைத்துனனுமான துரியோதனன் என்பதனை அறிந்து கொண்ட திரௌபதி, அவையில் நடந்து வந்த நிகழ்ச்சிகளை, அவ்வப்பொழுது கேட்டறிந்து வந்தவளாதலால், தன்னைத் துரியோதனன் அழைப்பதன் உள்நோக்கத்தைப் புரிந்து கொண்டு,

''நல்லது, நீ சென்று நடந்ததைக் கேட்டு வா,
வல்ல சகுனிக்கு மாண்பிழந்த நாயகர் தாம்
என்னை முன்னே கூறி இழந்தாரா? தம்மையே
முன்னம் இழந்து முடித்து என்னைத் தோற்றாரா?
சென்று சபையில் இச் செய்தி தெரிந்துவா''

என்று திருப்பியனுப்புகிறாள்.

வில்லியின் பிராதிகாமி படைத்துச் சொன்ன வினாவினையே, இங்குத் திரௌபதி கேட்டதாகப் பாரதியும் குறிப்பிடுகிறான்.

சென்ற தேர்ப்பாகன் மீண்டு வருவதற்குள், திரௌபதி, 'அச்சம் உலைஅறுத்தப் பேய்கண்ட பிள்ளை'யெனத் துடிக்கிறாள்.

திரௌபதியினால் அனுப்பப்பட்ட தேர்ப்பாகன், துரியோதனனிடம் சென்று அவள் கேட்ட வினாவினைச் சொல்லிச் சீறியெழுந்த துரியோதனன் தன் ஏமாற்றத்தையும் அதிகாரத்தையும் ஆத்திரத்தையும் காட்டும் வகையி

னும், திரௌபதியை மிரட்டிப் பணிய வைக்கும் எண்ணத்திலும் தேர்ப்பாகனிடம்,

''வேண்டிய கேள்விகள் கேட்கலாம்—சொல்ல
வேண்டிய வார்த்தைகள் சொல்லலாம்—மன்னர்
நீண்ட பெருஞ்சபை தன்னிலே—அவள்
நேரிடவே வந்த பின்புதான்—சிறு
கூண்டில் பறவையு மல்லளே!—ஐவர்
கூட்டு மனைவிக்கு நாண மேன்சினம்?
மூண்டு கடுஞ்செயல் செய்யுமுன்—அந்த
மொய்குழ லாளை யிங்கிட்டுவா''

என்று முழங்கித் தேர்ப்பாகனை மறுபடியும் திரௌபதிபால் அனுப்புகிறான். திரௌபதி, 'கூட்டு மனைவி'யாம். அத்தொடரிலுள்ள 'குத்தலை' நோக்குக.

மீண்ட தேர்ப்பாகன், 'அவன் சொன்ன மொழிகளைத் தொகைமுன் கூறி வணங்கி நிற்கத்' திரௌபதி, முன்னர்ச் சொல்லி விடுத்த வினாவினையே மேலும் தெளிவாக,

''ஞாயகர் தாம் தமைத் தோற்றபின்—என்னை
நல்கும் உரிமை அவர்க்கில்லை—புலைத்
தாயத்திலே வலைப்பட்டபின்—என்ன
சாத்திரத்தால் எனைத் தோற்றிட்டார்—நிலை
சாயப் புலைத் தொண்டு சார்ந்திட்டால்—பின்பு
தாரம் உடைமை அவர்க் குண்டோ?''

என்று கேட்டு, நீதி நூலின் கட்டளையினைத் துரியோதனனுக்கு நினைவூட்டுமாறு, சொல்லி விடுக்கிறாள்.

தன் கடமையினைச் செய்ய முனைந்த தேர்ப்பாகனுக்கு, இப்பொழுதுதான் சிக்கல் முளைக்கிறது. கடமையை ஆற்றுவதற்கும், நீதியினைப் போற்றுவதற்குமிடையே அவன் உள்ளத்தில் ஒரு போராட்டம் எழுகிறது. 'ஓரளவு கடமையைச் செய்ய முயற்சி செய்தாகி விட்டது; இனி

மேலான தர்மத்துக்குத்தான் துணை நிற்க வேண்டும்; அது தான் அறநெறியாகும்' என்று துணிவு கொள்கிறான். திரௌபதியின் நேர்மையான வினாவுக்குத் துரியோதனன் தக்க விடையளிக்காவிடில், தான், மேலும் தூது செல்வது, அநீதிக்கு உதவுவதாகுமென்று, தன்னுள்ளத்தே,

''.................... என்னைக்
கொன்று விட்டாலும் பெரிதில்லை—இவள்
கூறும் வினாவிற் கவர் விடைதரின்
அன்றி இவளை மறுமுறை—வந்து
அழைத்திட நானங் கிசைந்திடேன்''

என்று முடிவு செய்து கொண்டு, சபையை நண்ணித் துரியோதனனிடமும் சபையோரிடமும் திரௌபதியின் நீதி வாதத்தினை உரைக்கிறான். அவள் வாதத்திலடங்கியுள்ள உண்மையினை உணர்ந்த அவை, சொல்வதறியாது அலை ஓய்ந்த கடல் போல் அமைதியாயிருக்கிறது. பாஞ்சாலிக்கு உரிமை பூண்ட பாண்டவர்களும், வாய் திறவாது பதுமை போல் இருக்கின்றனர்.

அதுகாறும் தன் ஏவலை எதிர்த்தவர்களைத் துரியோதனன் கண்டதில்லை. இங்குத் தனக்கடிமைப்படுத்தப் பெற்றவொரு பெண், தன் கட்டளையினையேற்க மீட்டும் மீட்டும் மறுப்பதா? அதனைத் தான் எங்ஙனம் அனுமதிக்க முடியும்? அவையோர் முன், அது தனக்கு அவமானமல்லவா? தன் ஏகாதிபத்தியத்துக்கெதிரான போர்க்கொடியல்லவா?

துரபிமான உணர்ச்சியால் தாக்கப்பட்ட துரியோதனன் துள்ளிக் குதித்துத் தேர்ப்பாகனைப் பார்த்து,

''....................... அவள்,
ஏழு கணத்தில் வரச் செய்வாய்—உன்னைச்
சாக மிதித்திடு வேனடா?''

என்று முழக்கி, அவன்மீது பாய்கிறான்.

அநீதிக்கு அடிபணியக் கூடாதென்று துணிவு கொண்ட தேர்ப்பாகன், பணிவுடனும், அதே சமயத்தில் உறுதியுடனும், துரியோதனனை நோக்கி,

"சீறும் அரசனுக் கேழையேன்—பிழை
செய்த துண்டோ? அங்குத் தேவியார்—தமை
நூறுதரம் சென்ற ழைப்பினும்—அவர்
நுங்களைக் கேட்கத் திருப்புவார்—அவர்
ஆறுதல் கொள்ள ஒரு மொழி—சொல்லில்
அக்கண மே சென்றழைக் கின்றேன்—மன்னன்
கூறும் பணிசெய வல்லன்யான்—அந்தக்
கோதை வராவிடில் என் செய்வேன்?"

என்று துரியோதனன், நீதிக்குப் புறம்பாக மேலும் கட்டளையிட்டால், அதனைத் தன்னாற் செய்யவியலாதென்பதனை மறைமுகமாகச் சுட்டிக் காட்டுகிறான்.

தேர்ப்பாகனின் உண்மை உணர்வினை அறியாமல், அவன் வீமனைக் கண்டஞ்சுவதாகத் தவறாய் நினைத்து துரியோதனன், அருகில் நின்ற துச்சாதனனை விளித்து,

"..................... இந்தப்
பையலும் வீமனை அஞ்சியே—பல
வாகத் திகைப்புறு நின்றனன்—தம்பீ!
போகக் கடவை இப்போ தங்கே—இங்கப்
பொற்றொடி யோடும் வருக நீ"

என்று ஏவுகிறான்.

திரௌபதியை அவைக்குக் கொணருமாறு துரியோதனன் துச்சாதனனை ஏவியது, குரங்கின் கையில் கொள்ளி கொடுத்தது போலாயிற்று. துச்சாதனனைவிட மூர்க்கத்தனமும், மூடத்தனமும் உடைய வொருவனை, பாரதம் தவிர வேறெந்த இதிகாசத்திலும் பார்த்தலரிது.

பிரமன், இத்தகையவனை எங்ஙனம் படைத்தானென்று வினவத் தோன்றுகிறது.

''ஆன்றார் கேட்கின் செவி புதைக்கும்
அழல் கால் பெருஞ் சொல் அறனில்லான்''

என்று, ஒரு வரியிலே வில்லியார் துச்சாதனனின் பாபகுணச் சித்திரங்களைப் படம் பிடித்துக் காட்டி விடுகிறார்.

பாண்டவர்களையும், குறிப்பாகத் திரௌபதியையும் பழி வாங்கும் உள்ளத்தோடு, ஒரு தாவலில் திரௌபதியிருக்குமிடம் நோக்கி ஓடுகிறான் துச்சாதனன். தன் தாயான காந்தாரியுடனிருந்த திரௌபதியினை நெருங்கிச் சபையில் நடந்த நிகழ்ச்சிகளைக் கிளிபோற் சொல்லி, ''உன்னை வழக்கால் (முறைப்படி) வென்றோம், வருவாயே'' என்றழைக்கிறான். துச்சாதனனின் பேய் கண்டன்ன தோற்றத்தைக் கண்டஞ்சிய திரௌபதி, காந்தாரியினை யணையச் செல்லும் போது, ''அந்த மண்டபத்தில், என் அண்ணன் தவறி விழுந்ததனைக் கண்டு சிரித்தாயே; அதற்கீடாக உன்னையும் உன் கணவன் மார்களையும் உலகம் கண்டு சிரிக்கப் போகின்ற விடத்துக்கு வா. உலக வொழுக்கத்துக்குப் பொருந்தாத முறையில், ஒருத்தி, பல கணவன்மார்களைத் தழுவி வாழும் உனக்கு நாணமேன்? கூசாது வா!''

''தலத்துக்கு இசையாது, ஐவரையும்
தழுவித் தழுவித் தனித்தனியே
நலத்துப் பொய்யே மெய்போல
நடிக்கும் செல்வி; நலனுடையாய்
குலத்தில் பிறந்தா யாமாகில்,
கூசாது என் பின் போதுக,'

என்று, நல்லோர்கள் கூறவஞ்சும், ஆன்றோர்கள் கேட்டால் காதுகளைப் பொத்திக் கொள்ளும், வன்சொற்களைச் சொல்லிக் கொண்டே, தன் கைகளால் அவளைப்

பற்றியிழுக்கிறான். நெட்டுயிர்த்து, உளம் தளர்ந்து, உடல் நடுங்கித் திரௌபதி ஒரு பெண்ணால்தான் மற்றொரு பெண்ணின் மன நிலையினையுணர முடியுமென்ற நம்பிக்கையில் கண்ணீர் பெருகக் காந்தாரியின் முகத்தினை நோக்குகிறாள். ஆனால், காந்தாரியோ,

''பூவார் குழலி தளர்வோடு,
தன் சேர் பொழுதும் சிறிது இரங்காள்,
'நீவா' என்றே அருகிருத்தி,
நெடுங்கண் பொழியும் நீர்துடையாள்,
'மேவார் அல்லர், தமரழைத்தால்,
மேல் உன் கருத்து விளம்பப்
பாவாய் அஞ்சாது ஏகு' என்றாள்,
பல பாதகரைப் பயந்தாளே''

(குழலி—பாஞ்சாலி, மேவார்—பகைவர்)

'உன்னை அழைப்பவர்கள் உன் பகைவர்களல்லர். உன் உறவினர்களே! எனவே, துச்சாதனனுடன் போ' என்று சிறிதும் இரக்கமின்றிக் கூசாது கூறுகிறாள். 'இரண்டொரு பிள்ளைகளைப் பெற்ற பெண்ணுக்கும் இரக்கம் இயல்பாகவே இருக்கும். ஆனால் நூறு பிள்ளைகளைப் பெற்றும் காந்தாரிக்கு இரக்கம் சிறிதுமில்லையே என்ற ஏமாற்றத்தால், வில்லியார், இங்குக் காந்தாரியைப் ''பல பாதகரைப் பயந்தவள்'' என்று கூறுவதன் பொருள் நயம் சுவைத்தற்குரியது.

தாயின் சம்மதமும் கிடைத்து விட்டபின், சும்மா இருப்பானா துச்சாதனன்? 'செண்டு என்னும் கருவியால், திரௌபதியின் கூந்தலைப் பற்றி இழுத்துச் செல்ல வேறு செய்வதியலாத அவள், மானம் குலைய, மனம் குலைய, தாய் கைவிட்டாலும் தன்னைக் கொண்ட கணவன்மார்கள் விடார்கள்என்ற உறுதிப்பாட்டில், ''கொண்டார் இருப்பர்'' என்று நெறிக் கொண்டு செல்கிறாள்.

மானை யிழுத்துச் செல்லும் புலியினைப் போல், திரௌபதியினைத் துச்சாதனன் இழுத்துச் செல்லும் கண்ணராவிக் காட்சியினைக் கண்டவர்கள் இரங்கினர்; ஏங்கினர்; மார்பில் புடைத்துக் கொண்டனர்; முகத்தில் மோதிக் கொண்டனர்; அரற்றினர்; அழுதனர்; சாபமிட்டனர்; திரௌபதிக்கு நலமுண்டாக்கத் தெய்வத்தை வேண்டினர்.

இவ்வாறெல்லாம் அவலக் கோலத்தைக் கண்ட மக்களின் உணர்ச்சி யோட்டங்களை, வில்லியார் பல பாக்களில் கொட்டுகிறார்.

வெற்றிச் செருக்குடன், துச்சாதனன், கற்பினுக் கணியினைச் சபையில் கொண்டு நிறுத்த,

''மேகம் குருதி பொழிந்தது; அகல் வான் மீனும்
பகலே மிக விளங்கி
பூகம் பழும் உற்று, உற்பாதம் போது
யாவும் புரிந்தன ...''

(குருதி—ரத்தம்; வான் மீன்—நட்சத்திரங்கள்)

'கதிர் வேல் நிருபர்' (அரசர்) இரங்குகின்றனர். ஆனால், துரியோதனன், துச்சாதனன், சகுனி, கன்னன் ஆகிய நால்வரும், ''நவிலா நின்ற நால்வருமே சோகம் பிறவாது இருந்தார்கள்.''

உள்ளத்தில் இரக்கமிருந்தால் சோகம் உண்டாகும், தியாயம் பிறக்கும். 'துஷ்டசதுஷ்டர்கள் (நால்வர்கள்)' என்று வருணிக்கப்படும் இந்நால்வரும், 'கொடுமை' என்னும் ஒரே அச்சில் வார்க்கப் பெற்றவர்களாயிற்றே! அவர்களிடம் சோகத்தை ஏங்ஙனம் எதிர்பார்க்க முடியும்?

தங்கள் மனைவி, சூதாட்டத்தினால் இழக்கப்பட்டவளேனும், அவளுக்கு, சகோதரர்களின் மனைவிக்கு, ஓர் அரசகுல மங்கைக்கு, தாய்க்குலத்தின் பிரதிநிதியான ஒரு பெண்ணுக்கு அரை குலைய, நிலை குலைய, உடை குலைய,

குழல் பற்றி மாற்றானால் இழுத்து வரப்பட்டு, ஆடவர்கள் முன் நிறுத்தப்படும் அவமான நிலை ஏற்படக் கூடுமென்று பாண்டவர்கள் கற்பனை செய்துகூடப் பார்க்கவில்லை.

கனவில் தோன்றும் பயங்கரக் காட்சி போல், தம் முன் நிற்கும் கண்ணீர்ப் பாவை திரௌபதியினைக் கண்ட வீமன், கதைமேல் கை வைக்கிறான், விசயன் வில்லை நோக்குகிறான். நகுல சகதேவர்கள் தோள்மேல் கைகளை வைக்கிறார்கள். தருமன் தம்பியர்களை நோக்குகிறான். புயல் உருவாவதனைக் கண்டு, கையமர்த்துகிறான்; புயல் அடங்குகிறது.

"கொண்டார் காப்பார்' என்ற நம்பிக்கையுடன் வந்த திரௌபதிக்குப் பெரிய ஏமாற்றம்! பேரிடி! அந்நிலையில் மண் குதிரையினை நம்பிக் கரையேற முடியாதென்ற உண்மையினை யுணர்ந்தவராய், குருட்டுத் திருதராட்டிர னையும், ஞான வீட்டுமனையும் நோக்கி,

"மல்லார் திண்தோள் மாமாவோ!
மந்தா கினியாள் மைந்தாவோ!
எல்லா நெறியும் உணர்ந்தவர்க்கு!
இதுவோ மண்ணில் இயல்பு...?"

(மாமன் திருதராட்டிரன்; மந்தாகினி—கங்கை)

நீங்கள் பெண்ணொடு, ஆணொடு பிறக்கவில்லையா? என்று முறையிடுகிறாள்.

திருடனுக்குத் துணை போகும் திருடனான திருதராட்டிரன் ஏன் வாய் திறப்பான்? வீட்டுமன் மட்டும் சுடு சொற்களைக் கக்கும் துச்சாதனனைப் பார்த்து, "மன்னற்கு இளையோய்! தவறு உரைத்தல் வழக்கோ? வடமீன் அனையாளை" என்று கடிந்து விட்டு, திரௌபதி யைப் பார்த்து 'அவைக்கு உன் வழக்கினை உரை' என்று

யோசனை கூறுகிறான். தன் சொற்கள் 'செல்லா'வென்று கருத்தில் வீட்டுமன் அதிகம் பேசவில்லை.

வீட்டுமன், உரைப்படி, திரௌபதி அவையோரை நோக்கித் தன் பழைய வினாவினையே விடுக்கின்றாள். அவையிலிருந்தோர் ஒருவர் மற்றொருவர் முகத்தைப் பார்த்தாரேயன்றி உதட்டினைக் கூட அசைக்கவில்லை—செத்த மரக்கட்டையினும் கீழாயினர்.

மலைப்பாறையிடை இன்னீர்ச்சுனை தோன்றுவது போலும், கருமேகத்திடை மின்வெட்டுப் பூப்பது போலும், அந்நகரத்திலிருந்து, ஓர் அறக்குரல் எழுகிறது. நூற்றுவருள் ஒருவனாய்த் தப்பிப் பிறந்து விட்டவனும், "வாய்மைக் கடவுள்" "தக்கோன்" என்று புகழப்பட்டவனும், துரியோதனனின் கடைத் தம்பியுமான 'விகருணன்' என்பான் கொதித்தெழுந்து, அவையோரைப் பார்த்து, "பாஞ்சாலியின் கேள்வி உங்கள் காதுகளில் பாயவில்லையா? நீங்கள் நினைவுற்றுப் போனீர்களா? துரியோதனனைக் கண்டு அஞ்சுகின்றீர்களா? குலத்திற் பிறந்தவர்களாயின் உறுதியினையெடுத்துக் கூறுங்கள்"

"........நீர் நினைவுற்று இருந்தீர்! நினைவு அற்றோ,
இறையோன் முனியும் என நினைந்தோ?
இருந்தால் உறுதி எடுத்து இயல்பே
குறைவோ? குலத்துப் பிறந்தோர் கூறாரோ?"

என்று திரௌபதியின் வினாவுக்கு விடை கூற அழைக்கிறான். அவையில் எவரேனும் எழுந்து, ஏதேனும் உளறிக் கொட்டி விட்டால், விஷயம் கெட்டுவிடுமே? அதனால் கன்னன் முந்திக்கொண்டு "அடா; முந்திரிக் கொட்டை! நீ ஒருவன்தான் இப்பேரவையில் அறிவாளியென்ற நினைப்போ? நியாயம் வழங்கும்படி உன்னிடம் அவையோர் விண்ணப்பமும் செய்து கொண்டார்களா? எப்பொழுது தருமன் தன் இல்லினை (வீட்டினை) தோற்றானோ,

அப்பொழுதே இல்லினின்றும் பிரிக்க முடியாத இல்லாளை யும்அவன் தோற்று விட்டான் என்பது தேற்றம். 'இல்லவள், உரிமை பன்னி, குடும்பினி; இல்லே இல்லாள்!' என்பது 'இல்' லுக்கு முன்னோர் கூறியுள்ள இலக்கணம்.

**''...........மாநகரும் தனது இல்லும் வழங்குமாயின்**
**யான் படைத்த மொழியன்றோ? எங்கணும்**
**'இல்' எனப் பட்டாள் இல்லாளன்றோ''**

என்று போலிவாத மெழுப்பி, விகருணனை அடக்கி விடுகிறான்.

தருமன் தன் இல்லினை (வீட்டினை)ப் பணயமாக வைத்திழந்த போதே, அதனோடடங்குகின்ற இல்லாளை யும் முறையாக இழந்து விட்டானென்கிற கன்னன் வாதம் எடுபடுமானால், மீட்டும் திரௌபதியினைப் பந்தயமாக வைத்தாடச் சொன்னது பொருளற்றதாகிறதல்லவா? ஒருவர் தமது வீட்டினையொருவருக்கு விற்கும் பொழுது வாங்குகிறவர் விற்பவருடைய மனைவியையுமா, அவள், தமதுடைமையென்று பற்றிக் கொள்கிறார். இப்படிப்பட்ட வியாபாரம் எங்கேனுமுண்டா? கன்னன் வாதம், விந்தை யினும் விந்தையாயுளது.

கன்னன் கிளப்பிய வாதத்தால் எங்குச் சபையில் குழப்பம் உண்டாகி விடுமோவென்ற அச்சத்தால், அவை யோரைத் திசை திருப்ப வெண்ணிய துரியோதனன், துச்சாதனனைப் பார்த்து,

''......இம்மானமிலா ஐவரையும் வழக்கு வார்த்தை சொன்ன கிளிமொழியினையும் துகில் உரிதி'' என்று கட்டளையிடுகிறான்.

துரியோதனன் சொற்கள் தம் காதுகளில் வீழ்ந்தவுடன் துச்சாதனன் தம்மைக் கேட்குமுன், பாண்டவர்கள் தாமாகவே தம் மேலாடைகளைக் கழற்றிக் கொடுத்து

விடுகிறார்கள். இதனை, "'தருக துகில்' என எழுந்து தங்களை வன்பொடு துச்சாதனன் சொலா முன் 'வருக' என வரை மார்பின் வாங்காத உத்தரியம் வாங்கி ஈந்தார்'' என்று இச்செய்தியை வில்லியார் உடைந்த உள்ளத்தோடு குறிப்பிடுகிறார். 'வாங்காத உத்தரியம் வாங்கி'என்ற முரண் தொடையில் தொடையழகு பொருந்தியிருப்பதுடன் 'எந்த நாளினும் தன் மார்பினின்றும் எடுத்திராத மேலாடையினை எவராலும் எடுக்கவியலாத மேலாடையினை இன்று விதிக் கொடுமையினால் எடுத்து' என்ற பொருளழகும் பொலிந்து நிற்பது சுவைக்கத்தக்கது. இதுகாறும் வில்லியாரின் விளக்கத்தைக் கேட்டோம்.

இனி பாரதியின் முழக்கத்தைக் கேட்கலாம்.

தன்னை நோக்கித் திரௌபதியினை யவைக்குக் கொணரும் மதிப்பும், வெறுப்பும் வாய்ந்த பணியினைத் தந்தமைக்காகத் தன் அண்ணனை மெச்சிக் கொண்டெழு கிறான் துச்சாதனன். இந்த மாவீரனைப் பாரதி நமக்கு எப்படி அறிமுகப்படுத்துகிறான் தெரியுமா?

"......................இவன்
தீமையில் அண்ணனை வென்றவன்—கல்வி
எள்ளளவேனு மிலாதவன்—கள்ளும்
ஈரற் கறியும் விரும்புவோன்—பிற
தெவ்வர் இவன்தனை அஞ்சுவார்—தன்னைச்
சேர்ந்தவர் பேயென்று ஒதுங்குவார்
புத்தி விவேகமில் லாதவன்—புலி
போல உடல்வலி கொண்டவன்—கரை
தத்தி வழியும் செருக்கினால்—கள்ளின்
சார்பின்றியே வெறி சான்றவன்—இன்பம்
நத்தி மறங்கள் இழைப்பவன்—என்றும்
நல்லவர் கேண்மை விலகினோன்"

(தெவ்வர்—பகைவர்; நத்தி—விரும்பி; கேண்மை—நட்பு; துச்சாதனனைப் பற்றிச் சொற்களைக்

கொண்டு இப்படிப்பட்ட ஒரு கடுஞ் சித்திரத்தை இவ்வளவு இனிமையாகவும், எளிமையாகவும் விளக்கமாகவும் வரையப் பாரதிக்கே இயலும்!)

இத்தகைய 'பண்பாளன்' திரௌபதியிருந்த இடத்தை நாடி அவளை நெருங்குகிறான். அவள் அப்போது வீட்டுக்கு விலக்கிலிருந்ததால், துச்சாதனனைக் கண்டு சிறிதே அப்பால் செல்கிறாள். இச்செய்தியினை வில்லியார் குறிப்பிட வில்லை. பாரதி "அவள் தீண்டலையெண்ணி ஒதுங்கினாள்" என்று குறிப்பிடுகிறான். தன்னைக் கண்டு ஓடி மறையத் திரௌபதி முயற்சி செய்வதாக எண்ணிக் கொண்ட துச்சாதனன் "அடி செல்வதெங்கே?" என்று ஓடி அவளை வழி மறிக்கிறான்.

அமைதியாயிருக்கும் தண்ணீரில் கொள்ளிக் கட்டையைச் செருகினால் என்னாகும்? அது 'சுர்'ரென்று பொங்கி மேலெழும். அது போல அடக்கமாயிருக்கும் பெண்ணின இயல்பினைப் பயங்கொள்ளித்தனமாகவோ, பலகீன மாகவோ நினைத்து, அவளுடைய மானத்தைச் சிதைக்க நினைத்தால் பெண் குருதி கொதித்தெழும்; எரிமலையாய்ச் சீறியெழும். பெண்ணின் உயர்நிலையினையும், வீரக் கற்பினையும் நிலைநாட்ட வரிந்து கட்டி நிற்கும் பாரதி, இங்குப் பாரதத்தாயின் மங்கா மாண்பினைப் பாஞ்சாலி யின் வாய்மொழியாக வெளியிட்டுக் கயவர்களை எதிர்க் கிறான்.

பாரத மாதாவின் தெய்வீகப் பரம்பரையினை, இங்கு நினைத்துப் பார்க்கும் பாரதி திரௌபதி துச்சாதனனை நோக்கிப் பேசும் பேச்சில் "யான் யாரென்று அறியாமல் ஏதேதோ பேசுகிறாய். என் மரபு எக்காலத்திலும் மாசு படாதது; மாண்புமிக்கது.

"தேவர் புவிமிசைப் பாண்டவர்—அவர்
தேவி துருபதன் கன்னி நான்
காவலிழந்த மதிகொண்டாய்—இங்குக்
கட்டுத் தவறி மொழிகிறாய்—தம்பி
நீ வந்த செய்தி விரைவிலே—சொல்லி
நீங்குக"

என்று குறிப்பிட்டுக் காட்டுகிறான். பாரத மாதாவினை அவமதிக்க நினைக்கும் அறிவாளிகளுக்கு நினைவுறுத்தலாகும் இது.

திரௌபதியின் மொழிகளைக் கேட்டுக் கேலிச் சிரிப்புச் சிரித்த துச்சாதனன், "அடி! பசித்தவன் பழங்கணக்குப் பார்ப்பதில் பயனொன்றுமில்லை. நீ இப்போது,

"பாண்டவர் தேவியும் அல்லை நீ—புகழ்ப்
பாஞ்சாலத் தான் மகள் அல்லை நீ—புவி
யாண்டருள் வேந்தர் தலைவனாம்—எங்கள்
அண்ணனுக்கே யடிமைச்சி நீ
ஆடி விலைப்பட்டதாதி நீ—உன்னை
ஆள்பவன் அண்ணன் துரியோதனன்"

என்று, இழித்தும் பழித்தும் பேசிக்கொண்டே, திரௌபதியைப் பற்றக் கைநீட்ட,

"அச்சா! கேள், மாதவிலக் காதலால் ஓர் ஆடை
தன்னில் இருக்கிறேன்; தார்வேந்தர் பொற்சபைமுன்
என்னையழைத்தல் இயல்பில்லை—அண்ணன்பால்
என்னிலைமை கூறிடுவாய், ஏகுக"

என்று, அப்போது தானுள்ள நிலையினைத் திரௌபதி எடுத்துக் கூறியும், அதனைச் செவியேற்காமல், துச்சாதனன்,

"கக்கக் கவென்று கனைத்தே பெருமூடன்
பக்கத்தில் வந்து பாஞ்சாலி கூந்தலினைக்
கையினால் பற்றி முன்னிழுத்துச் செல்கின்றான்"

இங்குச், "சென்டால் அவள் பைங்குழல் பற்றிச் செல்கிறான்" என்று வில்லியார் குறிப்பிட்டிருக்கப் பாரதி, "கூந்தலினைக் கையினால் பற்றிச் செல்கிறான்" என்று குறிப்பிடும் வேற்றுமை நினைத்தற்குரியது. வில்லியாரின் எழுத்தாணி உண்மைச் செய்தியினை அப்படியே எழுதக் கூசிச் சிறிது நாகரிகமாக மாற்றியுரைக்கிறது. பாரதியின் பேனாமுனை பச்சையுண்மையினைக் கூறி, நம் சீற்றத்தை மூட்டி விடுகிறது.

துச்சாதனன்; திரௌபதியைப் பற்றியிழுத்துச் செல்லும் கொடூரக் காட்சியினைத் தெருவிற் கண்ட மக்கள்,

"என்ன கொடுமையிது!............
வீரமிலா நாய்கள், விலங்காம் இளவரசன்
தன்னை மிதித்துத் தராதலத்தில் போக்கியே,
பொன்னையவள் அந்தப் புரத்தினிலே சேர்க்காமல்,
நெட்டை மரங்களென நின்று"

புலம்பத் துச்சாதனன் நீதி கெட்ட மன்னன் நெடுஞ் சபையில் கொண்டு, தெய்வத் திருமகளை நிறுத்துகிறான்.

இங்குப் பாரதி ஊர்மக்களின் உணர்ச்சியெதிரொலியினைச் சில வரிகளில் சொல்லிக் காட்டினாலும், அவனுடைய சுடுகணைச் சொற்களில், ஒரு விருத்தியுரைக்குரிய பொருள்கள் பொருந்தியுள்ளதைக் காணலாம்.

சபையிற் கொண்டு நிறுத்தப்பட்ட பாஞ்சாலி, "மின் செய் கதிர் விழியால், பாண்டவரை வெந்நோக்கு" நோக்குகிறாள். "உங்கள் மனைவி, உங்கள் கண் முன்னே, பல்லோர் நிறைந்த அவையில் அவமானத்துக் குள்ளாக்கப் படுவதனை, ஒருவரல்லர், ஐவராகப் பார்த்துக் கொண்டு

கோழைகளாக இருக்கின்றீர்களே! உங்களுக்குக் கடமையுணர்ச்சியில்லாமற் போயினும் மானவுணர்ச்சியேனும் வேண்டாமா?'' என்று வினாவினை, அவள் சுடுபார்வை விடுப்பதனைப் 'பாண்டவரை வெந்நோக்கு' என்ற சொற்களில் கவிஞன் பெய்து காட்டுகிறான்.

பாஞ்சாலியின் வெம்மை நோக்கும் பாண்டவர்களைக் குத்தியெழுப்பவில்லை.

''மற்றவர் தாம் முன்போல் வாயிழந்து சீர் குன்றிப் பற்றைகள் (தூசுகள்) போல்'' இருப்பதனையும் பார்க்கிறாள். இனி, மண் குதிரைகளை நம்பிப் பயனில்லையென்ற முடிவில், அறங்கூறவையோரை விளித்து,

''வான் சபையில்,
வேள்வி பல அடைவீர்! கேடிலா நல்லிசை—படீர்!
வேள்வி தவங்கள், மிகப் புரிந்த வேதியர்காள்!
மேலோர் இருக்கின்றீர்! வெஞ்சினம் ஏன் கொள்கிலீர்''

என்று மிகவுருக்கமாக வினவுகிறாள்.

அப்பொழுது, ''தகுதியுயர் வீட்டுமன்'' திரௌபதியைப் பார்த்து,

''கோமகளே! பண்டையுக
வேத முனிவர் விதிப்படி நீ சொல்லுவது
நீதம் எனக்கூடும்; நெடுங்காலச் செய்தியிது,
ஆணொடு பெண் முற்றும் நிகரெனவே அந்நாளில்
பேணி வந்தார்............
இப்பொழுதை நூல்களினை எண்ணுங்கால்,
ஆடவருக்கு ஒப்பில்லை மாதர்;
..........................
..........................
தீங்கு தடுக்கும் திறமிலேன்''

என்று; கால மாறுபாட்டினால் ஏற்பட்டுவிட்ட ஒழுக்க நடைமுறைக் கேடுகளையும், ஆணினம், தன்

வலிமையாலும், சுய நல வேட்கையாலும் பெண்ணினத்தை யடிமையாக்கி அதற்கேற்பச் செய்து கொண்ட அநீதிக் கோட்பாடுகளையும், அநீதி நூல்களையும் அவளுக்கு நினைவூட்டி, விதியின் செயலைத் தடுக்கத் தன்னாலா காமையையும் விளக்கமாகக் கூறி, வருவதனைத் துணிவுடன் ஏற்குமாறு ஆறுதல் சொல்கின்றான். துரியோதனன் கொடுங்கோலினையும், அதர்மப் போக்கினையும் நேராகக் கண்டிக்காமல், மாறிவரும் காலத்தின் மேற் போட்டு, மறைமுகமாக வீட்டுமன் கண்டிக்கிறானென்பது தெளிவு. ஒரு காலத்தில், ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்ந்து வந்த நிலையினை, ஆணவம் கொண்ட ஆண்கள் பெண்கள்மீது, தம் ஆதிக்கத்தைச் செலுத்தக் காலப் போக்கில் செய்து கொண்ட போலிச் சாத்திரங் களைப் பாரதி இங்கு வீட்டுமன் வாய்மொழியாக எதிர்க் கிறான் என்றே உணர்தல் வேண்டும்.

வீட்டுமனின் விளக்கத்தைக் கேட்டும் துரியோதனன் மாறவில்லை. அதனால், மேலும் ஊக்கம் கொண்ட துச்சாதனன், திரௌபதியின் ''மைக்குழல் பற்றியிழுக்க''த் தொடங்க, அந்தப் பீடையை வீமன் நோக்குகிறான். கரை மீறிய வெஞ்சினம் அவனுள்ளத்திலெழுகிறது. அமைதி யாயிருந்த கடல் கொந்தளித்துப் பொங்கியெழுந்து கரை புரளத் தொடங்குகிறது. துச்சாதனனுடைய வரம்பு கடந்த ஆக்கிரமச் செயலுக்கும், தாங்கள் அடிமை செய்யப் பெற்ற தற்கும், தங்கள் கைகளைக் கட்டிப் போட்டதற்கும் காரண மானவன் தருமனே என்ற கருத்தில், தருமனை நோக்கி,

''நாட்டை யெலாம தொலைத்தாய—அண்ணே!
    நாங்கள் பொறுத்திருந்தோம்
மீட்டும் எமை யடிமை—செய்தாய்
    மேலும் பொறுத்திருந்தோம்,
துருபதன் மகளைத்—திட்டத்
    துய்ணன் உடன் பிறப்பை,

இரு பகடை என்றாய்—ஐயோ!
இவர்க் கடிமை என்றாய்''

என்று கடிந்து விட்டு, அதே வேகத்தில், அருகில் நின்ற சகதேவனை விளித்து, நிதானமிழந்தவனாய்,

'' இது பொறுப்பதில்லைதம்பி!
எரிதழல் கொண்டு வா
கதிரை வைத்திழந்தான் —அண்ணன்
கையை எரித்திடுவோம்''

[கதிர்— மாதர் குல்விளக்கு)

என்று கட்டளையிடுகிறான்.

எந்தத் தருமனைத் தன் கண்கண்ட தெய்வமாகவும், குருவாகவும், தந்தையாகவும் மதித்துத் தொழுது வந்தானோ, அந்தத் தருமனின் கைகளையெரிக்க வீமன் முற்படுகிறானென்றால், அவன் உள்ளம் எந்த அளவுக்கு உடைந்து போயிருக்க வேண்டுமென்று ஊகிக்க வேண்டியுளது. இச் செய்திவில்லியில் இல்லை. பெண்ணுக்கிழைக்கும் கொடுமையினைக் கண்டிக்கும் பாரதியின் கற்பனை இது.

எப்பொழுதும், சிறிது அதிகமாகவே துடிப்புக் காட்டும் விஜயன், இங்கு மிகுந்த பொறுமை காட்டுவதுடன், மிகவுயர்ந்த ஞானப்படியிலேறி, வீமனை நோக்கி,

'' தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும்
தருமம் மறுபடி வெல்லும்'' எனுமியற்கை
மருமத்தை நம்மாலே உலகம் கற்கும்,
வழி தேடி விதியிந்தச் செய்கை செய்தான்;
கருமத்தை மேன்மேலும் காண்போம்; இன்று
கட்டுண்டோம், பொறுத்திருப்போம் காலம் மாறும்.
தருமத்தை அப்போது வெல்லக் காண்போம்
தனு உண்டு காண்டீபம் அதன் பேர்''

என்று அமைதி கூறுவதுடன், எதிர்காலத்தில் வெற்றி தங்களுக்கே உரியதென்பதனையும், தன் காண்டீபத்தினைக் காட்டி, தருமத்தை நிலைநாட்ட அது உதவுமென்றும் வீமனுக்கு உறுதி கூறுகிறான்.

பாரதியின் பன்னூறு பாடல்களுக்குள் மேற்கண்ட பாடல் வைரமணி போன்றது. அடிக்கடி புலவர்களால் மேற்கோள் காட்டிப் போற்றப்படுவது. இங்கு விசயன் வாயிலாக வீமனுக்கு அறிவுரைகூறுமுகத்தால், உறுதியற்று ஊசலாடும் உள்ளமுடைய உலக மக்களுக்கு, 'முடிவில் அறம் வெல்லும்' என்னும் நம்பிக்கை விளக்கினைக் கையிற் கொடுக்கிறான் பாரதி.

விசயன் உரையினைக் கேட்டு வீமன் அடங்குவதும், விகருணன் என்னும் நல்லோன் எழுந்து அவையினை நோக்கி நீதி வேண்டுவதும், கர்ணன் அதற்கு மறுப்புரைப்பதும், பாண்டவர்கள், தங்கள் மேலாடைகளைக் கழற்றி எறிவதும் வில்லியாரைப் போலவே பாரதி எழுத்திலும் இங்கு இடம் பெறுகின்றன.

விக்ருணன், கர்ணன் ஆகிய இருவோரது சொற்போருக்கிடையே, 'துச்சாதனன் எழுந்தே அன்னை துகிலினை மன்றிடையுரிய'த் தொடங்க, யாவரும், கைவிட்ட நிலையில் அடைக்கலம் புகுந்தவர்களை என்றும் கைவிடாத, ஆபத் சகாயனாகிய ஆண்டவன் திருவடிகளில் உள்ளத்தைப் பதித்த பாஞ்சாலி,

''ஆறாகி, இரு தடங்கண், அஞ்சன
வெம்புனல் சோர, அளகம்சோர
வேறான துகில் தகைந்த கைசோர,
மெய் சோர, வேறு ஓர் சொல்லும்
கூறாமல் 'கோவிந்தா! கோவிந்தா!'
என்றரற்றிக் குளிர்ந்த நாவில்
ஊறாத அமிழ்தூற உடல் புளகித்து
உள்ள மெல்லாம் உருகினாளே

[அஞ்சனம்—மை; அளகம்-கூந்தல்; வேறான—அவிழ்ந்து வீழ்ந்த, துகில்- புடைவை; ஊறாத- அதற்கு முன் நாவில் ஊறாத]

இறைவன் திருவருளைப் பெற விரும்புகின்றவர்களை, அவன், திருநாமத்தை எவ்வாறு உச்சரிக்க வேண்டு மென்பதனைப் பாஞ்சாலி செயலால், மேற்கண்டபடி வில்லியார் நமக்கு அறிவுறுத்துகிறார். எம்பெருமானுக்கு ஆயிரமாயிரம் பெயர்களிருக்கவும், அவற்றுள் 'கோவிந்தன்' என்ற பெயரைத் திரௌபதி தேர்ந்தெடுத்துக் கூப்பிட்டதில் பொருள் சிறப்புண்டு. 'இந்திரன் ஏவிய மேகங்களைத் தடுத்துப் பசுக்களைக் காக்கப் பெரிய மலையையெடுத்தது போல, கண்ணா என்னைக் காக்க நீ மலையை எடுக்க வேண்டாம், உன் கடைக் கண் பார்வையே போதும் என்ற குறிப்பினைத் திரௌபதி 'கோவிந்தன்' என்ற சொல் வழக்கால் புலப்படுத்துகிறாள்.

'ஆதி மூலமே' என்றழைத்த யானை முன் அரை குலைய, தலை குலைய ஓடி வந்த அடியார்க்கெளியவன் அடியாளான பாஞ்சாலியின் கூவலுக்குச் செவி சாய்க்காம லிருப்பானா?

''அருமறை சொல்லிய நாமம் ஆயிரமும்
உரைதழைக்க, அமரர் போற்றும்
திருமலர்ச் செஞ் சேவடியோன், திருச்செவியில்,
இவள் மொழி சென்றிசைத்த காலை,
மருமலர் மென்குழல் மானின், மனம் நடுங்கா
வகை மனத்தே வந்து தோன்றி
கரிய முகில் அனையானும், பிறரெவர்க்கும்
தெரியாமல் கருணை செய்தான்''

[உரை தழைக்க—சொற்கள் தழைக்கும்படி; நடுங் காவகை—கலங்காதபடி, கருணை செய்தான்—ஆடைகளை யீந்தான்]

யார், எங்கே, எப்பொழுது தன்னை யழைக்கப் போகின்றார்களோ வென்று, உலகமெல்லாம், தன் காதுகளை வைத்துக் கொண்டிருக்கிற இறைவனுடைய செவியில், திரௌபதியின் அவலக்குரல் வீழா முன், ஓடோடி வந்து, அவள் உள்ளத்தில் இடங்கொண்டு, அவளுக்கு அருள் புரியத் தொடங்குகிறான் ஆண்டவன். யாருக்கு, எவ் வகையில், அருள் புரிய வேண்டுமென்பது, அவனுக்குத் தெரியும். வேண்டத் தக்கதும் வேண்ட அருள்வதும் அவன் பொறுப்புக்கள்.

பாஞ்சாலிக்குத் துயரினை விளைவித்த துச்சா தனனையோ, அவனுக்கு ஏவலிட்ட தலைவனான துரியோ தனனையோ அவர்களுக்குத் துணையாயிருந்த மற்றவர் களையோ இறைவன் தானே முன்தோன்றித் தண்டித் திருக்கலாம். அவன், அப்படிச் செய்யவில்லை. காரணம் அனைத்துத் தீயோரின் பூ பாரம் தீர்க்க வேண்டிய காலம் பின்னால் வருகிறது என்பதால், அல்லது தீயோரின்மீது இறைவன், தன் சீற்றத்தை வேறு விதமாகவும் காட்டியிருக் கலாம்.

அவ்வாறும் அவன் செய்ய விரும்பவில்லை. அவனால் முதலில் கவனிக்க வேண்டியவள் திரௌபதியே! இப்பொழுது அவன், தன்னருளைக் காட்ட வேண்டிய விதம் அவள் மானத்தைக் காப்பதே. திரௌபதியின் துகிலை யுரிந்து, அவளை, அவையில் அவமானப்படுத்த எண்ணியவர் களின் எண்ணம் ஈடேறாவண்ணம், அவளுக்கு வற்றாத சேலை வெள்ளத்தையருளி, அவர்களின் உள்ளத்தில் அச்சத்தையும், 'இறைவன் ஒருவன் உளன், அவனருள் பெற்றவர்களை யாராலும் வெல்ல முடியாது' என்ற உண்மையினையும் உண்டாக்குவதேயாகும். இச்சிறு செயலை, அவன் வெளித்தோன்றாமல் மறைந்தே செய்கிறான். இறைவன் திரௌபதியின் மனத்தே வந்த பிறகு, அவள் மனத்தில் முன்னிருந்த அச்சம், கவலை யெல்லாம் நீங்கி விட்டன. தன்னை மறந்து, உலகினை

மறந்து, தலைவன் தாளில் ஒன்றி விடுகிறாள். இந்த நிலையில் இறைவனருள் வடிவெடுத்த விதத்தினையும், அதன் விளை வினையும் வில்லிபுத்தூரார்,

"உடுத்த துகில், உணர்வில்லான் உரிந்திடவும்
மாளாமல் ஒன்றுக் கொன்றாங்கு
அடுத்த நிறம் பற்பல பெற்று, ஆயிரம்
ஆயிரம் கோடி யாடையாகக்
கொடுத்தருள உரிந்தன பட்டு, இருந்த பெரும்
தனிக்கூடம் கொள்ளாது ஓடி
எடுத்தனர் பற்பல வீரர்; உரிந்தோனும்
சலித்து, இருகை யிளைத்து நின்றான்"

[மாளாமல்—ஓயாமல்; கோடி — புத்தாடை;
கோடிக்கணக்காக]

என்று சுவைபட விளக்குகிறார்.

திரௌபதி செய்ததெல்லாம், உள்ளம் உருகி இறைவன் திருநாமத்தை ஓதியதுதான். இந்த ஓதல், அவளுக்கு என்ன நன்மை பயந்தது? அவள் மானத்தைக் காத்தது. எப்படி? எவராலும் அகற்ற முடியாதபடி, ஆடைகள், அவள் இடையினைச் சுற்றிச் சுருள் சுருளாய், அலையலையாய், மலைமலையாய் புரண்டோடி வரத் தொடங்கின. அப்படிப் புறப்பட்டு வந்த ஆடைகள் பத்தா? நூறா? ஆயிரம் ஆயிரம், கோடி கோடிகளாம்! "கோடி ஆடையாக" என்ற தொடர், புத்தாடைகளையும் கோடி என்ற பேரெண்ணினையும் ஒரு சேரக் குறிக்கும் நயம் இங்கு உணரத்தக்கது.

அங்ஙனம் புறப்பட்ட புத்தாடைகள் சாதாரண நூலாடைகளா? இல்லை. 'பட்டு' ஆடைகளாம்; இப்படிப் பட்ட பட்டாடைகளைத் துச்சாதனன் உரிய உரிய அவை, சபா மண்டபத்தை விழுங்கி அங்கும் இடமின்மையால், வெளியேயும் அடைத்துக் கொண்டு மேலும் மேலும் குவிந்து

வரும் ஆடை வெள்ளத்தைக் குறைக்க, சாதாரணப் பணியாளர்களல்லர், உடல் வலிமை படைத்த 'வீரர்' பலர் 'ஓடி' எடுத்தனர். மெதுவாக நடந்தெடுத்தால், ஆடைகள் மலையாகக் குவிந்து விடுமாதலால், 'ஓடி' வாரி எடுத்தனர். அங்ஙனம் வலிமிக்க வீரர்கள் பல்லோர் திரட்டியெடுத்தும் ஊற்றெனப் புரண்டு வரும் புடைவைகள் பெருக்கினைக் கண்டு கலங்காமல், துச்சாதனன் மேலும் மேலும் உரிய முடிவில், அவனும் கைசோர்ந்து மெய்சோர்ந்து, உள்ளம் சோர்ந்து அவமானத்தால், செய்வதறியாது திகைத்து நிற்கிறான்.

இவ்வளவு பொருள்களையும் 'உரிந்தோனும் சலித்து நின்றான்' என்ற தொடர் அடக்கிக் கொண்டுளது. 'உரிந்தோனும்' என்ற சொல்லிலுள்ள 'உம்'மை துகிலுரிந்த துச்சாதனன் ஓய்ந்தாலும், ஆடைகளின் பெருக்கு ஓயவில்லையென்ற பொருளைக் கொடுக்கும். இந்த அற்புதத்தைக் கண்டும், துச்சாதனன் மனம் மாறவில்லையே என்ற தம் வருத்தத்தை 'உணர்வில்லான்' என்ற சொல்லால் கவி குறிப்பிடுகிறார்.

இச்செய்யுள் மூலம் வில்லியார் இறைவன் திருநாமச் சிறப்பினை உணர வைத்தல் கருதுதற்குரியது.

அவைக்கண் நிறுத்தப்பட்டிருந்த திரௌபதியின் அவல நிலையினையும், அவளுக்கு எம்பெருமான் அருள்புரிந்த விதத்தினையும், பொருள் செறிந்த சீரிய செஞ்சொற்களால், மேற்கண்டவாறு வில்லிபுத்தூரார் விளக்கியுள்ளதனைப் பாரதி எவ்வாறு ஓவியம் தீட்டுகிறான் எனப் பார்ப்போம்.

பாரதிக்குக் கண்ணனிடத்தில் தனிப் பக்தியுண்டு. அவனைப் பாடுவதில் அவனுக்குச் சலிப்பே கிடையாது. இங்கும் அவனைப் பாட வந்துள்ள சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு பல வண்ணப் பாடல்களில் திரௌபதியின் குரலாகக் கண்ணன் சீர்மைகளைக் கொழிக்கிறான். கஜேந்திரனுக்கு அருள்புரிந்த காளிங்கனை

யடர்த்தது; பாலன் பிரகலாதனைக் காத்தது போன்ற அருட்செயல்களை யெடுத்தோதி, அது போன்று தனக்கும் அருள்பாலிக்கத் திரௌபதி வேண்டுகிறாள்.

பிச்சேறியவனைப் போலத் துச்சாதனன், தன் துகிலினையுரியவும், அவன் விலங்கு வன்மைக்கு ஈடுகொடுக்க மாட்டாத கையற்ற நிலையில், திரௌபதி இறைவன் ஒருவனையே புகலாகப் பற்றி,

''உட்சோதியில் கலந்தாள்; அன்னை
உலகத்தை மறந்தாள் ஒருமையுற்றாள்''

இறைவனோடு ஒன்ற வேண்டுமானால், மான அபிமானங்களை விடல் வேண்டும்; கற்றச் சூழலாகிய உலகறிவினை அகற்ற வேண்டும். எங்குமாகிய இறைவனைத் தன்னுள்ளத்திற் கண்டு, அவனில் பதிய வேண்டும். இந்த அபேத நிலையினை, திரௌபதிஇப்போது அடைகிறாள். அவள் நாபாச மொழிகளை நீக்குகின்றது. பக்தி மொழிகளைப் பொழிகின்றது.

''ஹரி; ஹரி; ஹரி என்றாள்—கண்ணா!
அபயம், அபய முனக்கபய மென்றாள்,
கரியினுக்கருள் புரிந்தே—அன்று
கயத்திடை முதலையின் உயிர் மடித்தாய்!
கரிய நன்னிற முடையாய்!—அன்று
காளிங்கன் தலைமிசை நடம்புரிந்தாய்!''
''நம்பி நின்னடி தொழுதேன்—என்னை
நாணம் அழியாதிங்குக் காத்தருள்வாய்''

என்று வேண்டுகிறாள்.

இங்குத் திரௌபதி வீட்டுலகத்தினை இறைவனிடம் வேண்டவில்லை. தனக்குத் தீங்கிழைத்த பகைவர்களை யழிக்குமாறும் கோரவில்லை. அப்போதைக்கு அவசியமான, 'நாணம்—காத்தலை' வேண்டுகிறாள்.

தன் சுயபலத்தில் நம்பிக்கை வைத்து, இறைவனை மறந்து, தன்முயற்சியாலேயே தன்னைக் காத்துக் கொள்ள முடியுமென்று எண்ணுகிறவரையில், இறைவன் அருள்பாலிக்க மாட்டார். 'என்னாலாவ தொன்றுமில்லை, நீயே எனக்குக் கதி' என்று 'சரணாகதி' செய்தால் உடனே அவனருள் கிட்டும். இந்த உண்மை, திரௌபதியின் செயலால் விளக்கிக் காட்டப் பெறுகிறது. தன் சாமர்த்தியத்தை நம்பித் தன் துகிலைத் துச்சாதனன் அகற்ற முடியாவண்ணம் திரௌபதி முயற்சி செய்த வரையில், இறைவன் அவளது உதவிக்கு வரவில்லை. தன் பலத்தில் நம்பிக்கையிழந்து, 'இனி ஆண்டவனே கதி' என்று உறுதியாக வெண்ணிப் புடைவையினைப் பற்றியிருந்த கைகளை நீக்கித் தலைமேல் கைகளைக் குவித்து வேண்டிய பொழுது, அவன் 'அவளைக் காக்க ஓடோடி வருகிறான்.

அவள் 'நாணம் காக்க' அவன் என்ன செய்கிறான்? அவள் இடையில் ஆடை வெள்ளத்தைப் புரண்டோடச் செய்கிறான். அந்த ஆடை வெள்ளம் 'பொய் பேசுகின்றவனுக்குத் துன்பம் அடுக்கடுக்காகப் பெருகுவது போலவும், புண்ணியவான்களின் புகழ் ஓங்குவது போலவும், தாய்மார்களின் கருணை வெள்ளமிடுவது போலவும் கடலலைகள் ஒன்றின் மேல் ஒன்று புரண்டோடி வருவது போலவும், பெண்ணினத்தின் புகழை வாழ வைப்போர்களின் செல்வம் உயர்வது போலவும், புரண்டோடி வந்ததென்று, பாரதி சுவையும் கற்பனையுமிகுந்த உவமைகளால் விளக்குகிறான்.

''பொய்யர்தம் துயரினைப் போல்—நல்ல
புண்ணிய வாணர்தம் புகழினைப் போல்,
தையலர் கருணையைப் போல்—கடல்
சலசலத் தெறிந்திடும் அலைகளைப் போல்'

''பெண்மையாள் வாழ்த்துவார்—அந்தப
பெருமக்கள் செல்வத்தின் பெருகுதல் போல்''

என்பன, பாரதியின், ஒப்பற்ற உவமைகள். அங்ஙனம் புற்றீசல் போல் புறப்பட்ட ஆடைகள் தாம்' எப்படிப் பட்டவை.

> "கண்ணபிரா னருளால்—தம்பி
> கழற்றிடக் கழற்றிடத் துணி புதிதாய்
> வண்ணப் பொற்சேலைகளாம்—அவை
> வளர்ந்தன, வளர்ந்தன, வளர்ந்தனவே!
> எண்ணத்தி லடங்காவே;—அவை
> எத்தனை எத்தனை நிறத்தனவோ!"

இவ்விடத்தில், வில்லிபுத்தூராரும், பாரதியும் கூறும் பொருளால் ஒத்துக் கற்பனையால், சுவையால், சிறிது வேறுபடப் படைக்கின்றனர்.

அவைக்கண் திரௌபதி காட்டிய தெய்வீக ஆற்றலைக் கண்ட வீடுமன் முதலிய காவலர்கள், "மெய் உளம் நடுங்கினர்" என்கிறார் வில்லியார். அவர்கள் உடலும் உள்ளமும் நடுங்கியதற்குக் காரணம் அவள் கேட்ட நியாய மான கேள்விக்கு விடையளிக்காமையும், துரியோதனக் குண்டர்களின் அக்கிரமச் செயல்களைக் கண்டித்து அடக்காமையுமேயாம். அவர்கள், தாங்கள் செய்த பாவத்துக்குக் கழுவாயாகத் தங்கள் முடிமேல் கைகுவித்து, "இவளே, கற்பினுக்கும் மரபினுக்கும் தெய்வம்" என்று பாடிப் பரவுகின்றனர்.

"உரைசால் பத்தினியை உயர்ந்தோர் (உயர்ந்த விண்ணில் இருக்கும் தேவரும்) ஏத்துவர்" என்ற மூதுரைப் படி, திரௌபதியின் தெய்வீகக் கற்பினைத் தேவர்களும், பாராட்டும் செயலுக்கெடுத்துக்காட்டாகக் கற்பக மலர் களைப் பொழிந்து, தேவதுந்துபியை முழக்குகின்றனர்.

திரௌபதியின் கற்பினாற்றலைக் கண்ணாரக் கண்டும், தெய்வம் அவளுக்குத் துணை நிற்பதனைப் பார்த்தும்,

துச்சாதனன் தோல்வியுற்றுக் கீழே சரிந்ததனை உணர்ந்தும் அழிவின் எல்லையினை நோக்கி விரைந்து செல்லும் துரியோதனன், மனம் திருந்தானாகி, ஏமாற்றத்தால் உண்டான சினம் மிகத் துச்சாதனனை நோக்கிப் "பைந் தொடியைக் கொணர்ந்து இனி என் மடியின்மிசை இருத்துக" எனப் பணிக்கின்றான்.

இங்குத்தான் பாஞ்சாலி சபதம் பிறக்கிறது; வரலாறு உச்சக் கட்டத்தை அடைகிறது. பெண்மையின் தனித் தன்மையும் ஆற்றலும் வெளிப்படுகின்றன.

துரியோதனனின் விபரீதக் கட்டளையினைக் கேட்ட திரௌபதி, துர்க்கா தேவியாகச் சீறியெழுந்து,

"என்ற பொழுது, அருந்ததிக்கும் எய்தாத
கற்புடையாள் இடியேறுண்ட
வன்தலை வெம் பணிபோல, நடுநடுங்கி,
மாயனையும் மறவாளாகி
'புன் தொழிலோன், யானிருக்கக் காட்டியதன்,
தொடைவழி புள்வாய் குத்திச்
சென்றிடுக, ஆருயிர்' என்று எவரும் வெருவுறச்
சபித்தாள் தெய்வம் அன்னாள்"

[எய்தாத—வாய்க்காத; பணி—பாம்பு; புள்—பறவை]

"அரசவையில் எனையேற்றி, அஞ்சாமல்
துகில் தீண்டி, அளகம் தீண்டி;
விரை செய், அளிஇனம் படிதார் வேந்தரெதிர்,
தகாதனவே விளம்பு வோரை,
பொருசமரில் முடிதுணித்து, புலால் நாறு
வெங்குருதி பொழிய வெற்றி
முரசறையும் பொழுதல்லால், விரித்த குழல்
இனியெடுத்து முடியேன் என்றாள்"

[அளகம்—கூந்தல்; விரை—வாசனை; அளி—வண்டு]

என்று வில்லிபுத்தூரார், திரௌபதி துரியோதனனுக்கும், துச்சாதனனுக்குமிட்ட சாபத்தினையும், அதனை முடிக்கச் செய்த சூளுரையினையும் கருத்துச் செறிவுடன் விளக்குகிறார்.

துரியோதனன், திரௌபதியைத் தன் தொடைமீது அமர்த்தக் கட்டளை பிறப்பிக்கிறான். அக்கட்டளை, செயலாற்றப்படுமுன்பே, திரௌபதியின் சபதம் பிறந்து, அவையினை அதிர வைக்கிறது. அந்த அதிர்ச்சியில், துரியோதனன் கட்டளை, தடைப்பட்டு நிற்கிறது.

திரௌபதி, துரியோதனன் தொடைமீது உட்கார வைக்கப்படவில்லையெனினும், அவன், அவளை அமர்த்து வதற்குரிய இடமாகத் தீய எண்ணத்துடன், தன் தொடையைச் சுட்டிக் காட்டியதால், அது தண்டனைக் குரியதாகிறது. எனவே, துரியோதனனின் உயிர், ஏனைய மக்களின் உயிர் இயல்பாகப் பிரிந்து செல்லும் வாயில்களா லன்றிப் பாடப்பட்டு விட்ட தொடை வழியே பிரியத் திரௌபதி சாபமிடுகிறாள். 'இவன் உயிரை இப்படிக் கொண்டு செல்' என்று கூற்றுவனுக்கும் கட்டளையிடும் வன்மை கற்பரசிகளுக்குண்டென்னும் உண்மையினைக் கவி, இங்கு மறைமுகமாகக் காட்டுகிறான்.

ஒரு பெண்ணின் உறுப்புக்களில், அவளுக்கு அழகினை யும் மதிப்பினையும் தருவதும், அவள் கணவன் கண்களுக்குக் களிப்பினையூட்டுவதும் அவளது கூந்தலே. அதனால் அவள், தனக்காக மட்டுமின்றித் தன் கணவனின் மகிழ்ச்சிக் காகவும், தன் கூந்தலைப் பலவிதமாக ஒப்பனை செய் கிறாள். அதற்கென அதிக நேரத்தையும் செலவிடுகிறாள். பெண்ணினுடைய கூந்தலின் மென்மையினையும், நீட்சி யினையும் நெய்ப்பினையும், திரட்சியினையும், கருமேக

நிறத்தினையும் வேறு பல அமைப்புக்களையும் பாடிப் பரவசப்படாத கவியே இல்லையெனலாம்.

இத்தகைய பாராட்டுக்குரிய கூந்தலைத் தீண்ட, அவள் கணவன் ஒருவனுக்கே உரிமையுண்டு. அவள் கணவனைத் தவிர, வேறு ஆடவர் அதனைத் தீண்டினால், அது அவளுக்கிழைக்கப் பெற்ற அவமானமாகக் கருதப்படும். இது பாரதப் பண்பு. இப்படிப்பட்ட தூயதன்மை வாய்ந்த திரௌபதியின் கூந்தல், துச்சாதனனால் 'அஞ்சாமல்'—கற்பு மகளின் கூந்தலைத் தீண்டினால் பாவம் வருமே என்று அஞ்சாமல் தீண்டப் பெற்று, அலங்கோலமாக அவிழ்த்து விடப்பட்டதால், அவன் செய்த பெருங்குற்றத்துக்குத் தண்டனையாக, உரிமையில்லாத பெண்களின் கூந்தலைத் தீண்டும் கயவர்களுக்கு என்ன தண்டனை கிடைக்கும் என்று எதிர் காலத்தவர்க்கு உணர்த்தும் எச்சரிக்கையாக, அவள் கூந்தலைப் பற்றியிழுத்துக் குலைய வைத்த துச்சாதனனைக் கொன்று, அவனுடலினின்று பெருகி வரும் குருதியையள்ளிக் கூந்தலில் தைலம் போல் பூசும் காலம் வரும் வரையில், 'விரித்த குழல் இனி முடியேன்' என்று திரௌபதி சூளுரை செய்கிறாள்.

திரௌபதியிட்ட சாபங்கள் பொய்யாது பலிக்கும் என்பதனை வலியுறுத்த, 'அருந்ததிக்கும் எய்தாத கற்புடையாள்' என்றும், 'தெய்வம் அன்னாள்' என்றும் வில்லி அடிக்கோடிட்டுக் காட்டுகிறார். எந்தச் செயலையும் இறைவன் நினைவுடன் செய்தால், அச்செயல் வெற்றி பெறத் தவறாது என்பதனை, 'மாயனையும் மறவாளாகி' என்ற தொடரால் அறிவுறுத்துகிறார்.

திரௌபதி செய்த சபதத்தினைத் தொடர்ந்து தருமனும் மற்றத் தம்பிமார்களும் சபதமேற்பார்கள் என்று எதிர்பார்ப்பது இயல்பே! ஆனால், 'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யும் பெருநிலையில் தருமன் சஞ்சரிப்பவனாகையால், எவரையும் பழிவாங்க அவன் எண்ணவில்லை. அதனால் அவன் எந்தச் சூளுரையும்

மொழியவில்லை. ஆனால் மற்றவர்கள், தன்மானவுணர்வு மிக்கவர்களாதலால், தங்களுக்கு வந்துள்ள பழியினைத் துடைக்க விரைகின்றனர்.

பாண்டவ சகோதரர்களுள் மிக வன்மையுடையவனும், சிறிது முரட்டுத்தனமுடையவனுமான வீமன்,

''பாஞ்சாலிக்கு அரசவையில் பழுதுரைத்
தோன், உடல் எனது படையாம் மேழிப்
போர்ஞ்சாலின் நிணம் சொரிய, துணைவரோ
குலம் மாளப் பொருவேன் யானே''

[மேழி—கலப்பை; சாலின்—வழியில்]

என்று, திரௌபதியின் கற்புக்கு மாசுண்டாகும்படி பேசிய துரியோதனனைப், பிறர் உதவியின்றித் தானொருவனே தன் படையால் மாய்ப்பதாகச் சபதமெடுத்துக் கொண்டு, அடுத்தபடி, திரௌபதியின் குழல் பிடித்துத் துகில் உரிந்தவனான துச்சாதனனையும் கொல்ல

''வண்டாரும் குழல் பிடித்துத் துகில்
உரித்தோன் உடல் குருதி வாரியுள்ளி,
உண்டு, ஆகம் குளிர்வதன் முன்,
இக்கரத்தால் புனல் உண்ணேன்; ஒருகால் என்கைத்
தண்டால், வெம் புனல் எற்றி,
மீதெழுந்து விழும் திவலை, தண்ணீராகக்
கொண்டு, ஆவி புரந்திடுவன்
இது விரதம் எனக்கு''

[அகம்—உடல்; தண்டு—சதை; எற்றி—மோதி]

என்று கூறிப் பயங்கரமானவொரு சூளுரை மொழிகிறான.

தங்கள் பத்தினியின் கூந்தலைப் பற்றியிழுத்தும் துகிலையுரிந்தும், அவளுக்கு அவமானமிழைத்த அந்தப் பாவி துச்சாதனனைக் கொன்று, அவன் உடலினின்றும் பெருக்கெடுத்

தோடும் குருதியினை வாரியள்ளிக் குடித்து, அத்துட்டனின் செயலால் தன் உடலில் ஏறிவிட்ட வெப்பத்தைத் தணித்துக் கொள்வானாம் வீமன். அதுகாறும் நீர் பருக மாட்டானாம்; இடையில் நீர் வேட்கையுண்டானால், தன் உயிரை உடலில் தங்க வைப்பதற்காக மட்டும், நீர் நிலைக்குச் சென்று, தன் கைத்தண்டினால், நீர்மேல் ஒரு முறையே மோதி, அதனால் மேலெழுந்து, வீழும் நீர்த்திவலைகளைக் கையினால் ஏந்திக் கிடைத்த நீரைப்பருகி உயிரைக் காத்திடுவானாம். இப்படிப் பட்டவொரு பயங்கரமான சபதத்தைச் செய்கிறான் வீமன்.

துரியோதனன், துச்சாதனன் ஆகிய இருவோரது உயிரும் வீமனால் மாய்க்கப்படப் போவதால், அவன் சபதம் இங்கு விரிக்கப்படுகிறது.

அடுத்தபடியாக, அருச்சுனன், நகுலன், சகாதேவன் ஆகியோர் யார் யாரைக் கொல்லச் சபதமெடுத்தார்கள் என்ற செய்தி, இவ்வரலாற்றுக்குத் தேவையில்லையாதலால் இங்குக் குறிக்கப்படவில்லை.

இச் செய்தியினைப் பாரதி எங்ஙனம் விளக்கிக் காட்டு கின்றான் என்பதனை, இனிக் காண்போம்.

துரியோதனாதியர்களால் பெரிதும் பாதிக்கப்பட்ட திரௌபதி முதலிலும், அவளைத் தொடர்ந்து வீமன் முதலியநால்வரும் சூளுரைகள் மொழிந்து சபதமெடுத்தனர் என்று முறைப்படி வில்லிபுத்தூரார் கூறியுள்ளார். ஆனால் பாரதி, முதலில் வீமன் சபதமெடுத்ததாகப் பதிவு செய்துள்ளான்.

திரௌபதி, என்ன சபதம் செய்கிறாள் என்பதனை முதலில் அறிந்து கொண்டாலன்றோ, அவள் சபதம் வெற்றி பெறத் தான் மேற் கொள்ள வேண்டிய சபதத்தினை வீமனால் பின்பு முடிவு செய்ய முடியும்? அதுதானே முறை இம்முறையை மாற்றி, வீமன் சபதத்தைப் பாரதி முதலில் கூறுவானேன் என்று சிந்திக்க வேண்டியுள்ளது.

பாரதி சொல்லும் வரலாறு பழங்கதைதான். அவனும், படிப்பவர்களும் நன்கறிந்ததுதான். யாதானுமொரு சிறந்த காரணம் பற்றிக் கவிஞன் வரலாற்றுப் போக்கினைச் சிறிதளவு, முன்பின்னாக மாற்றியுரைத்தாலும், படிப் போர்கள் தொடர்பு செய்துகொள்வார்கள் என்ற துணிவில் மாற்றியிருக்கலாம். அப்படி மாற்றும் உரிமை, 'பின்னோன் வேண்டும் விகற்பம் கூறுதல்' என்ற இலக்கண விதியால் பெறப் பெறுகின்றது. அங்ஙனமாயின், பாரதி என்ன காரணத்தினால் இம் மாற்றத்தைச் செய்திருக்கலாம்? பாரதி, தான் படைக்கும் காவியத்துக்குப் ''பாஞ்சாலி சபதம்'' என்ற பெயரை சபதத்துடன் நூலினை முடித்தால், அக் கற்பரசியின் நினைவும், அவள் செய்த சபதத்தின் பொருளும், படிப்போரின் உள்ளங்களில் நெடுங்காலம் நிலைத்து நிற்கும் என்றுகருதியிருக்கலாம் என்ற காரணத்தை ஊகிக்கலாம்.

பாரதியின் அபிமான தெய்வம் பராசக்தி. எனவே, வீமன் பராசக்திமீது ஆணை கூறித் தன் சபதத்தினை வெளி யிடத் தொடங்கியதாகவும், அச்சபதத்தினை, 'இது சாத்தனை செய்க பராசக்தி' என்று கூறி முடித்ததாகவும், பாரதி காட்டுகிறான். தெய்வத்தின் பேரில் சபதமெடுத்தால், அச் சபதத்தை உயிரைக் கொடுத்தேனும் நிறைவேற்ற முயல வேண்டுமென்பதும், தெய்வம் துணைநின்று வெற்றி தருமென்பதும், உட்கிடக்கை.

வீமன் செய்த சபதம

ஆணையிட்டு இஃதுரை செய்வேன்—இந்த
ஆண்மை யிலாத் துரியோதனன் தன்னை,
பேணும் பெருங்கனல் ஒத்தாள்—எங்கள்
பெண்டு திரௌபதியைத் தொடை மீதில்
காணின்றி, 'வந்திரு' என்றான்—இந்த
நாய் மகனாம் துரியோதனன் தன்னை

மாணற்ற மன்னர் கண் முன்னே—என்றன்
வன்மையினால் யுத்த ரங்கத்தின் கண்ணே,
தொடையைப் பிளந்துயிர் மாய்ப்பேன்—தம்பி
சூரத்துச் சாதனன் தன்னையு மாங்கே
கடைப்பட்ட தோள்களைப் பிய்ப்பேன்—அங்குக்
கள்ளென ஊறும் இரத்தம் குடிப்பேன்
நடைபெறும் காண்பீர் உல்கீர்—இது
நான் சொல்லும் வார்த்தை யென்றெண்ணிடல்
வேண்டாம்
தடையற்ற தெய்வத்தின் வார்த்தை—இது
சாதனை செய்க பராசத்தி'' என்றான்.

இந்தச் செய்தியை விளக்கும் வில்லியாரின் செய்யுட்கள் பண்டைப் புலவர்களின் செய்யுள்மிடுக்குடன் ஒத்து, சொற் செறிவுடன், ஒலியலங்காரம் பொருந்தி மிளிர்கின்றன. ஆனால் பாரதியின் சொற்கள் உலைக்களத்தினின்றும் தெறிக்கும் கனல் துண்டங்களாய், தெளிவான பளிங்குக் கண்ணாடியில் தோன்றும் பிரதிபிம்பத்தைப் போல், சினம் கொண்ட வீமனின் கனன்ற உள்ளத்தை அப்படியே படம் பிடித்துக் காட்டும் ஒளிச் சிதறல்களாகும்; பெண்ணினத்தை இழிவு செய்ய நினைக்கும் கீழ்மக்களின் உள்ளத்தினைத் தகர்க்கும் சம்மட்டியின் அடிகளாகும். எளிய சொற்களில் வீரத்தையும் வெஞ்சினத்தையும் கொட்டும் பாரதியின் சொல்லாற்றலை இங்குப் பார்க்கலாம்.

தன் அண்ணனின் [illegible]தை—அவளை சாதாரணச சந்தைக் கடைப் பெண்[illegible]—வணங்கத்தகும் வேள்வித் தீயான, பேணும் பெருங்கனல் ஒத்தவளை துரியோதனன், நாக்கில் நரம்பின்றிச் சிறிதும் 'நாணமின்றித் தன் தொடை மீது அமர்ந்திருக்கச் சொல்கிறானே! இவன் இழி செயலை, எதனுடன் ஒப்பிடலாம்! தன் எசமானன், தனக்குப் படைக்கும் உணவினையுண்ட பின்பும் திருப்தியடையாமல், தெருவில் கிடக்கும் எச்சிலை நாடியோடும் புலைநாயின் செயலுடன் தான் ஒப்பிட வேண்டும். இதனாற்றான்

பாரதி துரியோதனனை, 'நாய்மகனாம் துரியோதனன்' என்று இனம் காட்டுகிறான். இது சங்ககால உவமை.

எந்த மன்னர்கள், திரௌபதிக்குத் தீங்கிழைக்கப் பட்ட பொழுது, துரியோதனனுக்கஞ்சி, 'ஏன்?' என்று கேட்கவில்லையோ, அவர்கள், ஆண்மையில்லாத கோழைகள் என்பதனை, 'மாணற்ற மன்னர்கள்' என்று பாரதி சுட்டுவது எவ்வளவு பொருத்தமானது.

போர்க்களத்தில், தனக்குச் சமமான வீரர்களிடம் காட்ட வேண்டிய சூரத்தனத்தை, ஓர் அபலையிடம் காட்டிய துச்சாதனனை, எதிர் மறைச் சொல்லால், 'சூரத்துச்சாதனன்' என்று பொருத்தமாகக் கேலி செய்கிறான் பாரதி. எதிரிகளின் காலை வாரியடிக்கப் பயன் படுத்தப்படாமல், ஒருபெண்ணின் சீலையினைப் பற்றியிழுக்க பயன்படுத்தப்பட்ட அவனுடைய இழிந்த தோள்கள், 'பஞ்சாலியின். துகிலையும், கூந்தலையும் பற்றியிழுத் தனவே, அந்தக் 'கடைப்பட்ட தோள்களுக்கு'த் தக்க தண்டனை கொடுத்தாக வேண்டும். தண்டனை எப்படி வடிவெடுக்கும்? அந்தத் தோள்களை, நாரினையுரித்துப் போடுவது போல் போடுவானாம். அத்துடனன்றி, அங்குப் பெருக்கெடுத்தோடும் துச்சாதனனின் குருதியை யள்ளிக் குடிப்பானாம்; அதன் பின்னரே சினம் தணிவானாம்.

மனிதன் இரத்தத்தை மனிதன் குடிப்பதென்பது, நாகரிக மக்களிடையே நடப்பதன்று. கேட்பதற்கே அருவருப்பைத் தருகிறது. இந்தக் குரூரமான அநாகரிகச் செயலை, வீமன், செய்யப் போவதாக வஞ்சினம் கூறுகின்றானெனின், அதற்கு மனிதக் குருதியின்மீது, அவன் வேட்கை கொண்டுள்ளான் என்பது பொருளல்ல; தன் வெஞ்சினத்தைத் தீர்த்துக் கொள்ள, அவன் எந்த அநாகரிகச் செயலையும் செய்யத் துணிவான் என்பதே பொருள். இந்தச் சூளுரை வீமன், சீற்றத்தின் உச்ச அளவினைக் காட்டுகிறது.

துச்சாதனனைக் கொன்று, அவன் குருதியினைத் தன் கைகளால் வாரிப் பருகும் வரையில், தான் தண்ணீர் பருகப் போவதில்லையென்றும், ஒரு கால் பருக நேர்ந்தால், நீர் நிலை மீது, தன் தண்டினை மோதி, அதனால் மேலெழுந்து வீழும் நீர்த்துளிகளையேந்திப் பருகப் போவதாகவும் வீமன் சபதம் செய்ததாக வில்லியார் கூறிய செய்தியினைப் பாரதி இங்குக் கூறவில்லையென்பது நினைவு கொள்ளத்தக்கது அப்படி நடப்பது சாத்தியமில்லையென்பது பாரதியின் பகுத்தறிவு உணர்த்தியதோ என்னவோ!

வீமனுக்குத் தன் சபதம் நிறைவேறும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அவன் சூளுரை தெய்வத்தின் உந்துதலால் வந்ததாம். அதனால் தன் சபதத்தைத் 'தடையற்ற தெய்வத்தின் வார்த்தை' என்று குறிப்பிட்டு முடிக்கிறான்.

வீமனையடுத்து விஜயன், கன்னனைப் போரில் மடிப்பதாகக் கூறிய சபதத்தினையும், பாரதி தொட்டுக் காட்டிவிட்டுப் பாஞ்சாலியின் மாபெருஞ் சபதத்தைப் பின் வருமாறு விவரிக்கிறான்.

''தேவி திரௌபதி சொல்வாள்—ஓம்
தேவி பராசக்தி ஆணை யுரைத்தேன்;
பாவிதுச் சாதனன் செந்நீர்—அந்தப்
பாழ்த்துரி யோதனன் ஆக்கை இரத்தம்
மேவி இரண்டும் கலந்து—குழல்
மீதினிற் பூசி நறு நெய் குளித்தே
சீவிக் குழல் முடிப் பேன்யான்—இது
செய்யுமுன் னே முடியே'னென்றுரைத்தாள்''

மேற்கண்ட பாரதியின் பாட்டு, 'சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்' என்னும் அழகுக்கொரு சிறந்த எடுத்துக் காட்டு. சினங் கொண்டவர்கள், தம் கருத்தினை

வெட்டெனப் 'பட், பட்' டென்று வெடித்துச் சில சொற்களிற் கூறி முடிப்பார்களேயன்றி, நீட்டி முழக்க மாட்டார்கள். இங்குக் குறிக்கப் பெற்ற பாரதியின் பாட்டில், தேவையற்ற ஓர் அசைச் சொல் கூடவில்லை.

பாடலின் பொருள், பளிங்கு போல் தெளிவாயுளது. ஒவ்வொரு சொல்லும், பொருட் செறிவும், வெளிப்படைப் பொருளுடன், குறிப்புப் பொருளுமுணர்த்தும் ஆற்றலும் பெற்றது. அன்று, இராவணன் முன், 'என் சொல்லினால் சுடுவேன்' என்று வீர வாதம் பேசிய சினமுற்ற சீதையையும், "இறைமுறை பிழைத்த' பாண்டியன் முன் எரிமலையாய் நின்ற கண்ணகியையும், நினைவுபடுத்தும் வகையில், இங்குப் பாரதி பாஞ்சாலியின வீரத் தோற்றத்தைச் சொல்லோவியமாய் வடித்துள்ளான். இங்கு, நாம் அமைதியான திரௌபதியைப் பார்க்கவில்லை; ஆவேசம் கொண்ட பராசக்தியைப் பார்க்கிறோம்!

'புன் தொழிலோன், யான் இருக்கக் காட்டிய தன் தொடை வழியே, சென்றிடுக உயிர்' என்று திரௌபதி, துரியோதனனுக்குச் சாபமிட்டதாக, வில்லியார், தனிச் செய்யுளொன்றில் வெளிப்படையாகக் கூறியிருப்பதனைப் பாரதி இங்குக் குறிப்பிடவில்லை. எனினும், பாரதி, அக்கருத்தினை யேற்றுக் கொண்டுள்ளதனை, "எங்கள் பெண்டு, திரௌபதியைத், தொடை மீதில், நாணின்றி "வந்திரு'' என்றான்'' என்று, வீமன் வாய் மொழியால் வெளியிட்டிருப்பதால் அறியலாம்.

வேற்றான் மனைவியின் துகிலினையும், கூந்தலினையும் கூசாது பற்றியிழுத்த பாதகச் செயல் துச்சாதனனைப் பாவி'' என்ற சொல்லாலன்றி, வேறு எச் சொல்லால் பாஞ்சாலி குறிக்க முடியும்? அண்ணன் தாரத்தைத் தன் தொடை மீதிருக்கச் சொன்ன துரியோதனனுக்குக் கிடைக்கப் போகும் பரிசு 'பாழ்' நரகல்லவா? அதனால்

அவன் திரௌபதி வாக்கில் பாழ்த் துரியோதனனாகி விடுகிறான். எவ்வளவு பொருத்தமான அடைமொழிகளைப் பாரதி தக்க விடத்தில் புணர்த்துகிறான்.

துச்சாதனன், துரியோதனன் ஆகிய இருவரையும் கொன்று, அவர்களின் குருதியைப் பெருக்கிடச் செய்வதற்கும், அதன் பின்னரே பாஞ்சாலி தன் கூந்தலை முடிக்கப் போவதாகச் செய்த சபதத்துக்குமுள்ள உட் கருத்தினை, வில்லியார் வெளிப்படையாகக் கூறாமல், தொனிப் பொருளாற் பெற வைக்கிறார். ஆனால் பாரதி, 'துச்சாதனன் செந்நீரை'யும், 'துரியோதனன் ஆக்கை (உடல்) இரத்தத்தை'யும் கலந்து, தன் கூந்தலிற் பூசி, 'நறு நெய்' எண்ணெய்க் குளிப்புப் போல் குளித்த பின்னரே, விரித்த குழல் சீவி முடிக்கப் போவதாகத் திரௌபதி செய்த சபதத்தை விளக்கமாகத் தெளிந்த சொற்களிற் கூறி, இருவர் இரத்தத்தைப் பெருக்கு விடுவதற்கும், திரௌபதி, குழல் முடித்தலுக்குமுள்ள உட்பொருளைத் தொடர்பு படுத்திக் காட்டுகிறான். குணக்குன்றேறி நின்றார் வெகுளி கணப்பொழுதே நிற்பதுபோல், பாஞ்சாலி சபத வாக்கும் கணப்பொழுதில் முடிகிறது.

பாஞ்சாலி செய்த இந்தச் சபதத்துடன் பாரதி, தன் காப்பியத்தைத் தலைக்கட்டுகிறான்.

கருணையின் வடிவான பெண், இவ்வளவு பயங்கரமான வொரு சபதத்தைச் செய்கிறாளென்றால், அவள் உள்ளம் பாதிக்கப்பட்டு விட்ட அளவினையே அது எடுத்துக் காட்டுகிறது. அப்போது உருவாக்கப்பட்ட சூழ் நிலையினையும் நாம் இங்கு நினைவுக்கூரத் தக்கது.

நெறியும் பொறியும் கெட்ட முரடர்களிடமிருந்து தங்களைக் காத்துக் கொள்ளவும், தங்களுக்கு உதவி புரிந்த

வர்களுக்கு நன்மை செய்யவும் கற்பரசிகளுக்கு ஆண்டவன் அளித்துள்ள பரிசு. "சாப அனுக்கிரக" சக்தியே யாகும். இதனை வள்ளுவர், "கொழுநன் தொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் மழை" என்ற வாக்கினாலும், "குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி......காத்தல் அரிது" என்ற தொடராலும் உறுதிப்படுத்தியுள்ளார். இவர்களே 'நிறைமொழி மாந்தர்' எனப்படுவோர்கள். அந்த நிறைமொழி மாந்தர் வரிசையில் பாஞ்சாலி முன்னணியில் நிற்கிறாள். அந்நிறை மொழியின் சக்தியைப் பயன்படுத்தித் தன் சினத்தைத் தீர்த்துக் கொள்கிறாள் பாஞ்சாலி.

இந்தச் சிறு பெருங்காப்பியத்தை எழுதியதன் மூலம், பாரதி, இடைக் காலத்தில் பறிக்கப்பட்டிருந்த பெண்ணுரிமையை மீட்டு, அவர்களிடம் ஒப்படைத்த தன் லட்சியக் கனவினை, நனவாக்குகிறான். பாரதி, ஒரு புரட்சிக் கவிஞனாக விருந்தும், பழமையினைப் பழமையென்றவொரு காரணத்துக்காக ஒதுக்காமல், வேத, புராண, இதிகாசங்களிலுள்ள நற்பகுதிகளை, அவன் ஏற்றுப் பாராட்டத் தவறவில்லை யென்பதனைப் பாஞ்சாலி சபதத்தில் காட்டி இருக்கிறான், அதிகாரமும் தருவனபோல் தோற்றமளித்தாலும் முடிவில், அவை அடிமண் கூடவில்லாமல் அற்றுப் போய் விடுமென்ற உண்மையினைப் பாஞ்சாலி சபதத்தில் தொட்ட தொட்ட விடமெல்லாம் சுட்டிக்காட்டி இருக்கிறான். தெய்வபலத்தின் துணையன்றி, எவ்வகை மனித பலமும் வெற்றி தராது என்ற தன் நம்பிக்கையினை, ஆணியறைந்தாற்போல் பதிவு செய்திருக்கிறான்.

பெண் என்பவள் ஓர் அலங்காரப் பதுமையன்று; உயர் நிலையில் இயங்கக்கூடிய ஒரு ஜீவச் சுடர்; அவள் ஒரு தனித் தத்துவம், அவளுக்கும் ஒரு குறிக்கோள் உண்டு; அவள், மனைவியாகவும், சகோதரியாகவும், தாயாகவும் இருப்பதுடன், பெண்ணாகவும், நாட்டுச் சேவகியாகவும்,

தலைவியாகவும் இருக்க வேண்டும். தன் பெண்மையினை நிலைநாட்ட வேண்டிய சமயம் வரின், தனிப்போரும் நடத்தத் துணிவு கொள்ள வேண்டும் என்று வழிகாட்டி களையும் ஆங்காங்கே சுட்டுகிறான்.

இக் காப்பியத்தை உருவாக்க, அவன் கையாண்டுள்ள இலேசான பண்ணமைப்புக்களையும், மெட்டுக்களையும், பளிங்கு நடையினையும், கவிதைச் சுவையினையும், அமுதமயமான புத்துவமைகளையும், இலக்கியப் புலவர்கள் மட்டுமின்றிப் பாமரர்களும் படித்துக் கேட்டுப் புத்துணர்ச்சி பெறமுடியும்.

இறுதியில், பாஞ்சாலி சபதம் செய்யும் பொழுது, அவளைத் தெய்விக நிலைக்கு ஏற்றிப் பார்த்த தேவியின், பராசக்தியின்—தோற்றமாகவே காட்டி முடிக்கிறான்.

இங்ஙனம் தன் கொள்கைக்கேற்ற ஒரு பழங்கதையினை யெடுத்துக் கொண்டு, அதனைப் பட்டை போட்ட வைரமாக்கித் தமிழ் மக்களின் கையில் ஒப்படைக்கிறான். கவிதையின் வெற்றிச் சின்னம், பாரதியின், "பாஞ்சாலி சபதம்."

---



# க. தேவகி பிரகாசம்

இந்நூலின் ஆசிரியை திருமதி K.தேவகிபிரகாசம் அவர்கள் 22-4-1960 ஆம் ஆண்டில் பிறந்தவர். பெற்றோர் க. சீனிவாசப் பிள்ளை, க. சாந்தகுமாரி.

இவர் எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்டி., பி.எட்., ஆகிய பட்டங்களைப் பெற்றுள்ளார். எம்.எட்., பட்டத் தேர்வினை எழுதி உள்ளார். சென்னை, அயன்புரம் இரயில்வே காலனி உயர்நிலைப் பள்ளியில் பயின்று பள்ளி இறுதித் தேர்வில் நல்வெற்றி பெற்றவர். பள்ளிப் பருவத்தில் தமிழ், ஆங்கிலம் ஆகிய இருமொழிகளிலும் நடத்தப் பெற்ற பேச்சு, கட்டுரை போட்டிகளில் ஆர்வமுடன் பங்கு கொண்டு பரிசுகளைக் குவித்தவர். கணிதமும் இவருக்குக் கைவந்த கலையே.

புகுமுக வகுப்பு (PUC), முதுகலை—தமிழ் (M.A.) பட்டப்படிப்பு ஆகியவற்றை சென்னையில் புகழ்பெற்ற இராணி மேரி மகளிர் கல்லூரியிலும், இளங்கலை—தமிழ் (B.A.) பட்டப் படிப்பினை சென்னை காயிதே மில்லத் அரசு மகளிர் கலைக் கல்லூரியிலும் பயின்றவர். எம்.பில்., —பிஎச்டி., பட்டப் படிப்பினை திருப்பதி திரு.வெங்கடேஸ்வர பல்கலைக்கழகத்தின் மூலம் திருமணத்திற்குப் பிறகு தொடர்ந்து, வெற்றிக் கண்டவர். இவரது வெற்றிக்குப் பின் நின்று ஊக்கமளித்த இவரது வாழ்க்கைத் துணைவர் திரு. பிரகாசம் வழக்குரைஞராக திருப்பதியில் பணியாற்றி வருகிறார். ஐந்து வயதுப் பெண் குழந்தையும் இவருக்கு உண்டு.

தமிழ் மொழியில் தணியாத பற்றுக் கொண்டுள்ள இவர் ஆங்கிலத்திலும் ஆற்றல் மிக்கவர். தெலுங்கு மொழி அறிந்தவர். திருப்பதி தேவஸ்தானத்தின் 'சப்தகிரி' பதிப்பகத்தின் வெளியீடான பத்திரிகைகளில் தமிழ், ஆங்கில மொழிகளில் கட்டுரைகள் எழுதி வருகிறார். எழுத்தாளராகவும் விளங்கும் இவர் கல்வியில் அளவற்ற ஈடுபாடு கொண்டவர் என்பதற்கு இவர் பெற்றுள்ள பட்டங்களே சான்று பகரும். எனினும் 'கற்றது கைம்மண் அளவே' என எண்ணும் இவருக்கு இன்னும் பலகலை கற்பதில் ஆர்வம் அதிகம் உள்ளது என்பது வெளிப்படை.

---

மூவேந்தர் அச்சகம், சென்னை-14.